# செந்தமிழ்ச் செல்வி



## உள்ளுறை



சிலம்பு-ருரு] வள்ளுவர் ஆண்டு-உ0கஉ, மாசி, Mar. '81 [பரல் - எ

# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



குருகுலம் திருக்குறள்பீடம்

## தவத்திரு அழகரடிகள்

தோற்றம் : 10-4-1904 மறைவு : 18-2-1981

## மறைந்த கழக நூலாசிரியர் மூவர்



ஞா. தேவநேயப்பாவாணர்



அழகரடிகள்



அ. இராகவன்

கழக நூலாசிரியர்

## மூவர் பிரிவு

பதிப்புத்துறை உலகில் பெரும்புகழ்பெற்று விளங்கும்
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின்
மணிவிழா ஆண்டு முடிந்து
மணிவிழாவினைச் சீர்சிறப்போடு கொண்டாடத்
திட்டமிட்டுவரும் நிலையில்
நுண்மாண் நுழைபுலமிக்க கழக நூலாசிரியர்கள்
**தேவநேயப்பாவாணர், அழகரடிகள்,**
நுண்கலைச்செல்வர் **இராகவன்**
ஆகிய மூவரும்
1981 சனவரி, பிப்ரவரி, மார்ச்சு
ஆகிய முத்திங்களில் முறையே
ஒருவர்பின் ஒருவராக அடுத்தடுத்து
இறையடி சேர்ந்தமையினை
எண்ணி எண்ணி
நெஞ்சுபுண்ணாக வருந்துவதைத்தவிர
வேறு என்செய்ய வல்லோம்.
முன்னவரும் மூன்றாமவரும்
பாண்டிநாட்டு மாமதுரையிலும்
நடுவினர் தம்மூர் மாம்பாக்கம் குருகுலத்திலும்
இறையடி சேர்ந்தமை குறிப்பிடத்தக்கது.





நுண்கலைச் செல்வர்

**அ. இராகவன்**

தோற்றம் : 22—4—1902 மறைவு : 8—3—1981

செந்தமிழ்ச் செல்வி
திங்கள் வெளியீடு

| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு உ௦௧௨, மாசி | பரல் |
|---|---|---|
| ருரு | மார்ச் 1981 | எ |

## கழகப் பெரும்புலவர் இளவழகனுர் மறைவு

தமிழ் நாட்டின் தீயூழின் விளேவோ என்னவோ, கடந்த ஒரு சில திங்களில் நுண்மாண் நுழைபுல மிக்க தமிழ்ப்பேரறிஞர் சிலர் பேரா இயற்கை எய்தியுள்ளனர்.

கடந்த சனவரித் திங்கள் 15ஆம் நாள், தமிழறிஞர் நெஞ்சங் களி லெல்லாம் குடிகொண்டிருந்த மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்களே இழந்தோம். அவ்விழப்புத் துயர் ஆறு முன்னரே, நம் கழகப் பெரும் புலவராயிருந்து பல அரிய நூல்களே உருவாக்கியவரும் மறைமலேயடிகளாரின் மாணவரும் மாம்பாக்கம் குருகுல நிறுவுநரும், திருக்குறள்பீடத் தலேவருமான தவத்திரு அழகரடிகள் என்னும் இளவழகனுர் அவர்கள் 18—2—81 அன்று சென்னேயில் தனியார் மருத்துவ மனேயில் இறையடி எய்தினுர்கள் என்ற செய்தி நம்மை ஆற்ருெணுத்துயரில் ஆழ்த்திவிட்டது.

கழகப் புலவர் இளவழகனுர் எனில் தமிழறிந்தோர்யாரும் அறியாதிரார். பிற்காலத்தில், அஃதாவது அவர்கள் மாம்பாக்கத் தில் குருகுலம் அமைத்துப் பொதுத் தொண்டாற்றத் துவங்கு முன், கழகப்புலவர் இளவழகனுர் என்றே அவரைத் தமிழகம் அறியும். ஏனெனில் 1927ஆம் ஆண்டு முதல் அவர்கள் கழகத்தில் புலவராகப் பணியாற்றிய காலத்தில் ஆற்றிய தமிழ்த் தொண்டுகள் மிக அரியவை - சீரியவை.

பாலசுந்தரம் என்ற இயற்பெயரையுடைய இவர் தனித் தமிழ்த் தந்தை மறைமலேயடிகளார்பால் பேரீடுபாடு கொண்டு அவர்தம் அன்புத் தொண்டரானுர். அருங்கலே மாணவரானுர்.

தம் வாழ்நாள் இறுதிவரை அடிகளாரின் தனித்தமிழ்க் கொள் கையை விடாது பின்பற்றியதுடன் அதன் வெற்றிக்கு அரும்பாடு பட்டார். அடிகளார் தம் இரு கண்ணெனப் போற்றிய தமிழையும் சைவத்தையும் இளவழகனர் கண்ணெனப் போற்றி வளர்த்தனர்.

தொல்காப்பியம், சங்க நூல்கள், பிற்கால இலக்கியங்கள் ஆகியவற்றைத் தமிழ்நன்மக்கள் விரும்பிக் கற்குமளவிற்கு இனிய முறையில், தொகுத்தும், விளக்கியும் உரை எழுதி வெளியிட்ட பெருமை கழகத்தையே சாரும். கழகத்தின் இச்சீரிய பணிக்குத் துவக்க காலத்தில் பெருந்துணை நின்றவர் இளவழகனராவார். இவரைக் கொண்டு கழகம் வெளியிட்ட உரை நூல்களும், உரை நடை நூல்களும் மிகப் பல.

'சங்க இலக்கிய இன்கவித்திரட்டு' என்னும் நூல் மூன்று பகுதிகளாக வெளி வந்துள்ளது. அவை சங்க இலக்கியங்களை எல்லாரும் எளிதிற் புரிந்து கொள்ளும் வகையில் அமைந்து மிகப் பெருமளவில் தமிழ்ப் பற்றுளரிடையே பரவலாயின.

அங்ஙனமே சங்க நூற்கட்டுரைகள் இரண்டு பகுதிகளாக வெளிவந்துள்ளன. 1945இல் புலவரவர்கள் எழுதிய "பண்டைத் தமிழர் இன்பியல் வாழ்க்கை; பண்டைத் தமிழர் பொருளியல் வாழ்க்கை" என்னும் நூல்கள் ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியத்தின் பிழிவாகவும் இனிமை எளிமை - தெளிவு தரும் உரைநடை இலக்கியங்களாகவும் திகழ்கின்றன.

புலவரவர்கள் சைவசித்தாந்தத்தில் பெரும் புலமை பெற்றவர். மெய்கண்ட சாத்திர உரை நடை, சிவஞான போத ஆராய்ச்சி முதலிய நூல்கள் இவர்தம் சித்தாந்தப் புலமைக்குச் சிறந்த சான்று களாகும். அன்றியும் புலவரவர்கள் தவத்திரு அழகரடிகளான பின்னர் தமிழகத்தில் பல ஊர்களில் சித்தாந்தச் சொற்பொழிவு களும், திருமந்திரச் சொற்பொழிவுகளும் ஆற்றிச் சைவசமயத்திற்கு ஆற்றிய தொண்டுகள் மிகப் பல.

மேலும் அடிகளார் திருக்குறளிடத்துப் பெரும் பற்றுக் கொண்டு, குறளுக்குப் பல விளக்கங்களும், ஆராய்ச்சிக் கட்டுரை களும் எழுதியுள்ளார். அடிகளாரின் 'திருக்குறள் அறம்' அவர்தம் திருக்குறளாராய்ச்சிக்குச் சிரிய சான்றாகும். கழகத்தின் அறநிலைய மாம் தென்னிந்தியத் தமிழ்ச்சங்கம் முனைவர் மு. வரதராசனர் நினைவாக 1968இல் நிறுவிய 'மு. வ. திருக்குறட் சொற்பொழிவுப் பரிசுத்திட்ட'த்தின்படி 1970இல் அடிகளார் ஆற்றிய முதற் சொற் பொழிவாகும் இத் 'திருக்குறள் அறம்'.

குறள்நெறி பரப்புதலில் அடிகளார் கொண்டிருந்த பற்றின் காரணமாகவே மாம்பாக்கத்தில் 'திருக்குறள் பீடம்' அமைத்துப்

பணியாற்றத் துவங்கினுர் என்பதும் ஈண்டுக் குறிப்பிடத் தக்கது.

இங்ஙனமே அடிகளார் சங்க இலக்கியத்தில் பெற்றுள்ள பயிற்சியினை இவர்தம் சங்க இலக்கியக் கட்டுரைகள் பறை சாற்றும். இவர் இயற்றிய 'சங்க இலக்கிய இன்கவித் திரட்டு' மூன்று நூல்களையும் பாராட்டி முனைவர் ஆர். கே. சண்முகஞ் செட்டியார் அந் நாளில் 100 வெண்பொற் காசுகள் பரிசாகவழங்கிச் சிறப்பித்தார் என்பதும் ஈண்டுக் குறிப்பிடத்தக்கது.

பாகனேரி தனவைசியச் சங்க வெளியீடாகக் கழகவழி வெளி வந்த கலித்தொகை நூலுக்கு முன்னுரையாக அடிகளார் எழுதி யுள்ள 'கலித்தொகை மாட்சி'யும், விளக்கக் குறிப்புக்களும் மிகவும் போற்றுதற்குரியன.

மேலும், அடிகளார் தம் ஆசிரியர் மறைமலையடிகளிடம் கொண்டிருந்த பற்றினையும், அவரிடம் பெற்றிருந்த பெரும் பட்டறிவினையும் இவர்தம் 'மறைமலையடிகளார் மாட்சி'யில் பரக்கக் காணலாம்.

அத்துடன் அடிகளார் அவ்வப்போது செந்தமிழ்ச் செல்வியில் கட்டுரைகளையும், கருத்துரைகளையும் எழுதிவந்தமையும், கழக ஆட்சியாளர் தாமரைச் செல்வர் அவர்களோடு கொண்டிருந்த தொடர்பினையும் காணும்போது அடிகளார் தமிழுக்கும் சைவத் திற்குமென வாழ்ந்தார்கள் என்பது சொல்லாமலே விளங்கும்.

கழக ஆட்சியாளர் தாமரைச் செல்வர் அவர்களின் பவள விழாவின்போது, பவளவிழா மலரில் 'இலக்கிய உடன்பிறப்பினர்' என்னுந் தலைப்பில் எழுதியுள்ள கருத்துரை பிறிதோரிடத்தில் வெளியிடப் பெற்றுள்ளது. அடிகளார்க்கும் ஆட்சியாளர்க்கு முள்ள அன்புத் தொடர்பினை அவ்வுரை விளக்கும்.

அடிகளாரின் தமிழ்த் தொண்டினையும் சமயத் தொண்டினையும் விரிக்கின் பெருகும். இவ்விதழில் அடிகளாரின் வரலாற்றுச் சுருக்கமும், அவர்களியற்றிய நூல்களின் பட்டியலும் தரப் பட்டுள்ளன. அன்பர்கள் அவற்றை ஆண்டுக் காண்க.

அடிகளாரின் மறைவு குறித்து அன்பர் பலர் இரங்கலுரை களும், பாக்களும் அனுப்பியுள்ளனர். அவற்றை இயன்ற அளவு இவ்விதழில் வெளியிட்டுள்ளோம்.

இறையடி யெய்திய அடிகளாரின் குடும்பத்தார், உற்றார் உறவினர், குருகுலத்தில் பணியாற்றும் அன்பர்கள் ஆகியோர்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேம்.

அடிகளாரின் இன்னுயிர் இறையடியில் இன்புறுவதாக.

———

# தவத்திரு அழகரடிகள் வரலாற்றுச் சுருக்கம்

தவத்திரு அழகரடிகள் மதுராந்தகத்தை அடுத்த மாம்பாக்கத்தில், கருணீகர் குலத்தில், 1904ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்கள் 10ஆம் நாள், திரு. சுப்பராயப்பிள்ளை என்பாருக்கும் திருமதி மாணிக்கம்மாளுக்கும் திருமகனாராகத் தோன்றினார். பெற்றோர் இவருக்கு வழங்கிய பெயர் 'பாலசுந்தரம்' என்பதாகும். இவர்தம் ஆசிரியர் மறைமலையடிகளாரால் வழங்கப்பெற்ற பெயர் 'இளவழகன்' என்பதாகும். பின்னர் இவர் தீக்கை பெற்றபின் தம் பெயரை அழகரடிகள் என மாற்றிக் கொண்டார்.

இவர் தமது 16ஆம் அகவையில் மறைத்திரு. மறைமலையடிகளாரின் மாணவரானார். அப்போதே இவர் சிறந்த உரையாசிரியராகத் திகழ்ந்தார். மறைமலையடிகளார் எழுதிய 'திருவொற்றி முருகர் மும்மணிக் கோவை' என்னும் நூலுக்கு 300 பக்கங்கட்கு மேற்பட்ட விளக்கவுரை ஒன்றினை எழுதி அடிகளாரின் பாராட்டுக்குரியவரானார்.

அழகரடிகள் 1925ஆம் ஆண்டில் தமது 21ஆவது அகவையில் தங்கம்மாள் என்னும் பெண்ணின் நல்லாளை மணந்தார். இப்போது இவருக்கு இரண்டு பெண்கள் உள்ளனர். ஒருவர் டாக்டர் சண்முகம், எம்.பி., பி.எஸ். என்பாரின் துணைவியாராவார். மற்றொருவர் குருகுலத்திலேயே ஆசிரியராகப் பணியாற்றி வருகிறார்.

1925—26ஆம் ஆண்டுகளில் பலருக்குத் தமிழ் இலக்கண இலக்கியம், சைவசித்தாந்தம் ஆகியவற்றைக் கற்பித்து வந்தார். பல மாவட்டங்களில் சமயச் சொற்பொழிவுகளும், இலக்கியச் சொற்பொழிவுகளும் ஆற்றிவந்தார்.

1927 முதல் 1930 வரை சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தில் கழகப் பெரும் புலவராகவும், செந்தமிழ்ச் செல்வி இதழின் ஆசிரியராகவும் இருந்து அரிய தமிழ்ப் பணிகள் ஆற்றிவந்தார். அவர் கழகத்தில் பணியாற்றியகாலை, நீதிவெண்பா, நான்மணிக்கடிகை, நீதிநெறி விளக்கம் முதலிய நூல்கட்கு உரை எழுதியும், கழக வெளியீடுகளைச் செப்பஞ் செய்தும், பிழை திருத்தியும் கழக நூல் வெளியீட்டுப் பணிகட்குப் பெரிதும் உதவினர்.

1930—31ஆம் ஆண்டுகளில் ஆசிரியர் மறைமலையடிகளாரின் பொதுநிலைக் கழகத் தொண்டரானார். 1932—33இல் தமது சொந்த

துவக்கிச் சிலகாலம் நடத்திவந்தார். சில நூல்களையும் வெளியிட்டார். ஆனால் அத்துறை அவருக்கு எதிர்பார்த்த பலனைக் கொடுக்கவில்லை.

1940இல் மீண்டும் கழகப் புலவராகப் பணியேற்றுச் சிலகாலம் தமிழ்ப்பணி யாற்றினார். அப்போது "சங்க இலக்கிய இன்கவித் திரட்டு" என்னும் நூலினை 3 பகுதிகளாகவும், "சங்க நூற் கட்டுரைகள்" என்ற நூலினை 2 பகுதிகளாகவும் எழுதினார். இவர் எழுதிய பல நூல்கள் செந்தமிழ்ச் செல்வியில் முதலில் இடம் பெற்ற பின்னரே, நூலாக வெளியிடப்பெற்றன. இவர் எழுதிய சங்க இலக்கிய இன்கவித் திரட்டு 3 பகுதிகளும் மிகச் சிறந்த இலக்கிய மாகத் திகழ்கின்றன. இவற்றின் சிறப்பு நோக்கிப் பின்னர் இவை உயர்திரு. இர. பாலகிருட்டிண முதலியார் அவர்களால் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப் பெற்றன. இப்போதும் அந்நூல்கள் ஆங்கிலங் கற்றோரிடை நல்ல வரவேற்பும் பாராட்டும் பெற்று வருகின்றன.

1942இல் சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தின் சார்பில் சிவஞானபோத விரிவுரையாற்றிச் "சிவநெறிச் செஞ்சொற் கொண்டல்" *என்னும் பட்டமும் ஈராயிரம் ரூபா பரிசும் பெற்றார். 1944 முதல் 49 வரை திருமந்திர விரிவுரையாற்றித் "திருமந்திரப் பேராசிரியர்" என்னும் பட்டமும் பத்தாயிரம் ரூபா பரிசும் பெற்றார்.

1949இல் மாம்பாக்கத்தில் 'குருகுலம்' என்ற அமைப்பினைத் தொடங்கி வைத்தார். சிற்றூர்களிலிருந்து வந்து படிக்கும் மாணவர்கட்குப் பசிநோய் போக்க 'மாணவர் இலலம்' ஒன்றினையும் தொடங்கினார். உயர்திரு ஓமந்தூர் இராமசாமி ரெட்டியார் பேராசிரியர்கள் கல்கி, ஆர். பி. சேதுப்பிள்ளை ஆகியோர் இக் குருகுலத் திறப்புவிழாவில் கலந்து கொண்டு அடிகளாரின் தொண்டினைப் பாராட்டிப் பேசினர்.

அடிகளார் 1947 முதல் 1954ஆம் ஆண்டுவரை ஆண்டு தோறும், பாடல் பெற்ற நகரங்களுக்குச் சென்று சமயப்பணி செய்து வந்தார். இளவழகனாராக இருந்த இவர்கள் 2-5-1960 இல் நடைபெற்ற சிவனடியார் திருக்கூட்ட மெய்யுணர்வு† விழாவில் தவத்திரு குன்றக்குடி அடிகளார் தலைமையில் 'திருக்குறள் பீடாதிபதி' ஆனதோடு, அழகரடிகள் என்னும் பெயரினையும் பெற்றார். அன்று முதல் அவருடைய திருக்குறள் பணி தொடர்ந்து

---

* இப்பட்டம் கழக ஆட்சியாளர் கருத்தில் எழுந்ததேயாகும்

† திருக்குறளில் 36 ஆவது அதிகாரம் ஆகும்.

நடைபெறலாயிற்று. 1950 முதல் 12 ஆண்டுகள் சென்னை இறை பணி மன்றத்தின் சார்பில் பெரியபுராண விரிவுரை ஆற்றினார்.

அடிகளார்க்கு 2—5—1965 இல் மணிவிழா நடைபெற்றது. டாக்டர் அ. சிதம்பரநாத செட்டியார் விழாவிற்குத் தலைமை தாங்கினார். அவ் விழாவில் மணிவிழா மலர் ஒன்றும் 'அழகரடிகள்' என்னும் சிறு நூலும் வெளியிடப் பெற்றன. 1964 முதல் 1966 வரை திருக்குறள் தெளிவுரை வகுப்புகள் நடத்தி வந்தார். 1968 இல் குருகுலத்தில் பெண்களுக்கென்று தனி உயர்நிலைப் பள்ளி யொன்றினைத் துவக்கி வைத்தார். 1973 இல் "பொது மறை" என்னும் திங்கள் இதழைத் துவக்கினார். கவிஞர் சி. து. கன்னிசாமி அவர்களை முதல்வராகக் கொண்டு குருகுலத்தில் புலவர் கல்லூரி ஒன்றினையும் துவக்கி வைத்தார்.

1955 இல் சர், ஆர். கே. சண்முகம் செட்டியார் அவர்கள் கோவைத் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் அடிகளார்க்குச் "சங்க நூற் பெரும் புலவர்" என்னும் பட்டத்தினை அளித்துச் சிறப்பித்தார். 1957 இல் பம்பாய் சென்று பல விரிவுரைகள் செய்தார். 1968 இல் கல்கத்தாவுக்கும், பிற வடநாட்டுப் பகுதிகட்கும் பயணம் மேற் கொண்டார்.

1961 ஆகஃச்டு திங்கள் 20, 21, 22 ஆம் நாள்களில் நடை பெற்ற கழகத்தின் 1008 ஆவது நூல் வெளியீட்டு விழாவில் கழக நூலாசிரியர் எழுவர் பாராட்டும் பரிசும் பெற்றனர். அவர்களுள் தவத்திரு அழகரடிகளாரும் ஒருவராவர்.

27—1—1977 இல் கழகத்தின் சார்பில் நடைபெற்ற மறைமலை அடிகள் நூற்றாண்டு விழாவில், மறைமலையடிகளாரின் தொண் டர்கள் ஐவரைக் குன்றக்குடி யடிகளார் பாராட்டிப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தனர். அவர்களுள் முதன்மையானவர் நம் தவத்திரு அழகரடிகளாவர். மற்றையோர் மறை திருநாவுக்கரசு. ந. ரா. முருகவேள், கோவை இளஞ்சேரன், சிறுவை நச்சினார்க் கினியன் ஆகியோராவர்.

இங்ஙனம் பல்வேறு கல்வித் தொண்டுகளையும், தமிழ்ப் பணிகளையும் ஆற்றி வந்த அடிகளார்க்கு 1975 இல் பவளவிழாவும், குருகுலத்தின் வெள்ளி விழாவும் மிகச் சிறப்பாக நடைபெற்றன.

தவத்திரு அழகரடிகள் கழகத்தோடும் கழக ஆட்சியாளரவர்க ளோடும் நெருங்கிய தொடர்பும் பற்றும் கொண்டவர். அவ்வப் போது செந்தமிழ்ச் செல்வியில் தம்முடைய கருத்துரைகளை எழுதி வந்தார். சென்னையில் மறைமலையடிகள் நூல்நிலையம் 1958 இல்

அமைக்கப்பெற்றபின் அழகரடிகள் சென்னைக்குவரின் நூலகத்தில் தங்குவதுண்டு. கடந்த ஓராண்டு காலமாகவே அவர் உடல் தளர்ச்சி யடைந்து நலிவோடு இருந்தார். 18—2—1981 மாசிமகச் சிறப்பு நாளில் தம் எழுபத்தேழாம் அகவையில் இறையடி எய்தினார்.

**அழகரடிகள் எழுதிய நூல்கள் :**

*நீதி வெண்பா உரை*
*ஜினேவா வீரன்*
*நான்மணிக் கடிகை உரை*
*முதுமொழிக் காஞ்சி உரை*
*நீதிநெறி விளக்கம் உரை*
*ஏலாதி உரை*
*நாலடியார் உரை*
*சங்க இலக்கிய இன்கவித் திரட்டு பகுதி-க*
*சங்க நூற் கட்டுரைகள்-பகுதி-க*
*சங்க நூற் கட்டுரைகள்-பகுதி-உ*
*தொல்காப்பிய மூலம் விளக்கக் குறிப்பு*
*ஔவையார் திருவுள்ளம்*
*அதிவீரராமர் அறநெறி*
*சிவப்பிரகாசர் செந்நெறி*
*சங்க இலக்கிய இன்கவித் திரட்டு பகுதி-உ*
*சங்க இலக்கிய இன்கவித் திரட்டு பகுதி-ங*
*பண்டைத் தமிழர் இன்பியல் வாழ்க்கை*
*பண்டைத் தமிழர் பொருளியல் வாழ்க்கை*
*மறைமலையடிகளார் மாட்சி*
*சிவஞானபோத ஆராய்ச்சி ('செல்வி'யில் வெளிவந்துள்ளது)*
*திருக்குறள் அறம் (பரிசு பெற்ற நூல்)*
*மெய்கண்ட சாத்திரம் 14 உரை நடை ('அச்சில்')*

———

## சைவத்திற்கும் தமிழுக்கும் பேரிழப்பு

அழகரடிகளை எனக்கு 60 ஆண்டுகளாகத் தெரியும். ஓட்டப் பிடாரம் சித்திவிநாயகர் சபையில் என் முதல் மேடைப் பேச்சு 5—2—21ல். அன்று அவரும் பேசினார்; அன்றைக்கு எனக்கு வயது 22. அவருக்கு வயது 17. அப்பொழுது அவர் பெயர் பாலசுந்தரம்.

பின் மறைமலையடிகளாரிடம் பாடம் கேட்டபொழுது இளவழகனார் ஆனார். குருகுலம் கண்டு அழகரடிகள் ஆனார்.

எழுத்தாலும், பேச்சாலும், உழைப்பாலும், பொருளாலும் அறுபது ஆண்டுகள் தொண்டுமனப்பான்மையுடன் நற்பணிகள் பல புரிந்தவர்.

உலகுக்கு ஒருமறை திருக்குறள்; உலகுக்கு ஒரு குரு வள்ளுவர்; உலகுக்கு ஒரு குலம் குருகுலம் எனக்கண்டவர்.

அவரது இழப்பு குருகுலத்திற்கு மட்டுமன்று; சைவத்திற்கும், தமிழுக்குமே பேரிழப்பு ஆகும். எல்லாம் வல்ல இறைவன் நம் அனைவர்க்கும் நல்லாறுதல் அளிப்பானாக.

—முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம்.

## அருமையில் எளிய அழகரடிகள்

[குருகுலக் கவிஞர், சி. து. கன்னிசாமி]

### முன்னுரை

"செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்"

என்னும் திருக்குறளுக்கு உரை வகுத்த ஆசிரியர் பரிமேலழகர் 'ஒத்த பிறப்பினராகிய மக்களுள் செய்தற்கு எளியனவற்றைச் செய்யாது, அரியவற்றைச் செய்வார் பெரியர். அவ் எளியவற்றைச் செய்து அரியவற்றைச் செய்ய மாட்டாதார் சிறியர்' என்கின்றார். இந்தக் கருத்தின்படி, தம் வாழ்நாள் முழுதும் பெரியராகவே இருந்தவர்கள் மாம்பாக்கம் குருகுலம் திருக்குறட் பீடாதிபதிகள் தவத்திரு அழகரடிகள் ஆவார்கள். அடிகளார் சென்ற மாசிமக நன்னாளில் அம்மையப்பர் அருள் வெளியிற் கலந்தார்கள். அவர்கள் நினைவாக இங்குச் சில கருத்துக்களை நினைவு கூர்வோம்.

### பொருள்

மனிதப் பிறவியில் மக்கள் யாவரும் புறத் தோற்றத்தால் பரிமேலழகர் குறிப்பிடுவதுபோல் ஒரே மாதிரியாக இருத்தலைக் காண்கிறோம். மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய உடல் உறுப்புக்களும் அனைவர்க்கும் ஒரே மாதிரியாகவே உள்ளன. ஆனால் அவர்களில் பெரும்பாலோர் தத்தம் ஐம்புலன்களும் தமக்கு விழுப்பம் காட்டி ஈர்த்துச் செல்லும் போக்கிலேயே செல்பவர்கள் ஆவர். அவை, தம்மைச் செலுத்தும் வழியிலேயே கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று மகிழ்ந்து தத்தம் வாழ்நாளைக் கழிக்கின்றனர்.

'எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவியே அரிதரிது' என்பார் தாயுமான அடிகள். எத்துணையோ பிறவி இடர்ப்பாடுகளில் கிடந்து உழன்று உழன்று வந்தபின் ஓர் உயிருக்கு மனிதப் பிறவி அரிதாக வாய்க்கிறது. அரிதாகக் கிடைத்த இப் பிறவியில் வாழ்வாங்கு வாழ்ந்து இம்மையிலே புகழும் மறுமையில் வீடும் எய்துதற்குரிய நல்வழிகளை நாடாமல், மாந்தரில் பலர், பெரியோர் தமது பட்டறிவு நூலறிவுகளால் நடந்து காட்டிய வழியில் நில்லாமல் தம் மனம்போன போக்கில் 'கண்டதே கோலம் கொண்டதே வாழ்வு' என வாழ்ந்து மேலும் மேலும் பிறவித் முயற்சியில் 'மறைமலையடிகள் கல்விக் கழகம்' என்ற பெயரில் அச்சகம் ஒன்று நிறுவி, 'முல்லைக் கொடி' என்னும் இதழைத்

துன்பங்களில் கிடந்து உழல்கிறார்கள். ஒரு சிலர் மட்டும்தாம் பிறவி எடுத்ததன் நோக்கம் இன்னது என்று நன்கு அறிந்து, இல்லற வாயிலாக நல்லறம் புரிந்து இம்மைக்குரிய புகழையும் வீடுபேறு அடைதற்குரிய நல்வழிகளையும் பெற்று மகிழ்கிறார்கள். இத்தகையோர், இம் மாபெரும் சமுதாயத்தில் விரல்விட்டு எண்ணத் தகுந்த மிகச் சிலரே ஆவர்.

இல்லறத்தில் ஒருவன் தனது மனத்திற்கினிய மனையாளோடு கூடி, நல்லொழுக்க நெறியில் வாழ்ந்து, அறம் பொருள் இன்பங் களை முறையே நுகர்ந்து, அதன் பயனாக வீடு அடைதல்தான் வாழ்வாங்கு வாழ்தல் என்று தெய்வப் புலமைத் திருவள்ளுவர், தம் திருக்குறள் வாயிலாக உலகுக்கு உணர்த்துகின்றார், திருக்குறள் கூறும் அறநெறியை நன்கு உணர மாட்டாதார் 'யானை கண்ட குருடர்' போக்கில் தத்தம் மனத்துக்கு இசைந்த வாறு குறட்பாக்களுக்கு வலிந்து பொருள்கொண்டு தம்முடைய ஐம்புலன்களுக்கும் அடிமைகளாகி நடந்து சென்று பிறவி நலத்தை வறிதாகக் களர் நிலத்தில் கவிழ்த்த நல்லாவின் பாலைப்போல வீணாக்குகின்றனர்.

இத்தகைய இழிநிலைமைக்குக் காரணம் நமக்கு அரிதாகக் கிடைத்துள்ள திருக்குறள் மறையின் கருத்துக்களை மக்கட் சமுதாயத்தில் நன்கு விளக்கிக் கூறுவதோடு நில்லாது, திருக்குறள் வழியில் இன்னபடி நடக்க வேண்டும் என்று தாமே இல்லற நிலையில் முன்மாதிரியாக நடந்து காட்ட இதுகாறும் எவரும் முன்வராமையே என்று சொன்னால் அது மிகையாகாது.

சமுதாயத்தில் மக்கள் திருக்குறளின் அறவழியில் வாழ்ந்து பொருளும் இன்பமும் பூத்து இறைவன் நல் அருளுக்கும் உரியவராக வேண்டும் என்ற முதன்மையான நோக்கத்தின் அடிப்படையிலேயே, மதுராந்தகம் என்ற பேரூருக்குத் தென்பால் குருகுலம் தோன்றி வளரலாயிற்று. சங்கநூற் புலவர் வரிசையில் நம் காலத்தில் வாழ்ந்த மாபெரும் தமிழ்ச் சான்றோர் ஆசிரியர் மறைமலையடிகளார் அன்புக்கு உகந்த மாணவராகத் திகழ்ந்த ஆசிரியர் இளவழகனார் அவர்களே. தவநிலையில் உயர்ந்து தவத்திரு அழகரடிகள் என்ற திருப்பெயரோடு திகழ்ந்தபின் குருகுலத்தில், தெய்வப்புலவர் திருவள்ளுவர்க்கும் அவருடைய படைப்பான திருக்குறளுக்கும் சிறப்புச் செய்யும் வகையில் திருக்குறட்பீடம் அமைத்துச் சிறப்புற நடத்தலானார்கள்.

பீடம் அமைவதற்கு முன்பாகவே திருக்குறளின் அதிகாரக் கருத்துக்களைச் செயற்படுத்தும் நோக்கத்தில்தான் அங்குப்

பெரியதொரு நிலப்பரப்பு அமைக்கப்பட்டது. அடிகளார் அவர்கள் தம்முடைய விரிவுரைகள், நூற்படைப்புகள் ஆகியவற்றினின்று கிடைத்த ஊதியங்களைக் கொண்டு, எறும்பு ஒன்று முயன்று பொருளைச் சேர்ப்பதுபோல இந் நிலப்பரப்பைச் சிறிது சிறிதாக உருவாக்கினார்கள். திருக்குறள் பீடம் தோன்றியபின் அது திருக்குறட் செயலகமாகப் பணிபுரிந்து வருவதுடன், திருக்குறள் வாழ்வியற் கருத்துக்களை நாடெங்கும் ஊரெங்கும் பரப்பும் வகையில் ஆங்காங்குப் பீடத்துக்குக் கிளை நிலையங்கள் தோன்றிச் செயற் படுகின்றன.

ஒவ்வோராண்டிலும் தைப்பொங்கல் நாளிலிருந்து திருமடத்தில் நாள்தோறும் திருக்குறள் விழா நடத்தப்பட்டு விழா முடிவில் தமிழகத்தின் பெருநகரம் ஒன்றில் திருக்குறள் விரிவாக்க விழா நடைபெறுவது வழக்கம். விழாவில், திருக்குறள் கருத் தரங்கம், பட்டி மண்டபம் போன்றனவும் குருகுலப் பள்ளிச் சிறுர்களின் கலை நிகழ்ச்சிகளும் நடைபெறும். சிதம்பரம், மதுரை, சேலம் ஆகிய நகரங்களில் இத்தகைய விழாக்கள் நடைபெற்றன. இவ் வாண்டில் வேலூர்ப் பெருநகரத்தில் சிறப்பாக இவ் விழாவினை நடத்த வேண்டும் என்று எண்ணினர்கள். தைத்திங்கள் தொடக்கத்தில் அடிகளார் உடல் நலம் சற்றுச் சீர்கெட்டு இருந் தமையால் இத் திட்டம் சற்றுத் தள்ளிப் போடப்பட்டது. ஆனால் நம் எண்ணம் ஒன்ருக இருக்க இறைவன் திருவுள்ளக் குறிப்பு வேருக இருத்தலை அறியமுடியாமற் போயிற்று. அடிகளாரைத் தன் திருவடி நிழலில் அணைத்துக் கொள்ளத் திருவருள் இத்தகைய விரைவினைக் காட்டும் என்று அறிந்திலம்.

'உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல்'' என்ற மறைமொழியின் படி அடிகளார் அவர் பிறர் கனவிற்கூட நினைத்துப் பார்க்க அஞ்சும் அரிய பெரிய செயல்களையே செய்ய நினைப்பார்கள். அஃது அவரகளுக்குத் தவிர்க்க முடியாததொரு பழக்கமாகவே ஆகி விட்டது. 'இது நம் குருகுலத்துப் பொருளாதாரத்துக்குச் சிறிதும் ஏலாத செயலாயிற்றே! இப்பொழுது இதனைத் தொடங்குதல் பொருத்தமில்லையே' என்று எங்களில் யாராவது ஐயப்படும் போதெல்லாம் அவர்கள்,

''தொடங்குதலே நங்கடமை, தொடங்குவன நன்முறையில்
தரிசொன் றின்றி
இடங்குலவ முற்றுசெயல் இறையருளின் ஆம்''

என்று சொல்லி எம் ஐயத்தைப் போக்குவார்கள். இறையருளின் துணைகொண்டு தொடங்கிய பணி எப்படி எப்படியெல்லாமோ

விழுந்து புரண்டு தலைநிமிர்ந்து வெற்றிநடை போடுவதைத்தான் இதுகாறும் நாங்கள் பார்த்து வந்திருக்கிறோம்.

தஞ்சைப் பெருவுடையார் கோயிலை மாமன்னன் இராசராசன் அமைத்திட்டான் என்றால் அது, ஒரு சிலர் சொல்வதுபோல் ஒரு செயற்கரிய செயல் என்று சொல்வதற்கில்லை. மன்னவன் கண் சிறிது அசைந்தால் போதும், மாநிலம் முழுதும் அவனுக்குப் பணி செய்யக் காத்திருந்தது. மாமன்னன் எண்ணிய எண்ணம் இனிதே செயற்பட்டு எளிதாக வெற்றியடைய அரசுக் கருவூலத்தில் பொன்னும் மணிகளும் குவிந்து கிடந்தன. பிறகு என்ன குறை! இராசராசன் நினைத்திருந்தால் எத்தனையோ பெருவுடையார் திருக்கோயில்கள் எழுப்பியிருக்கலாம் அல்லவா!

ஆனால் அழகரடிகள் நிலைமை வேறு. ஒரு செயலைத் தொடங்கும்போது உண்மையிலேயே கையில் ஒன்றும் இராது. திருவருளை உளமுருக எண்ணி வேலையைத் தொடங்கிவிடுவார்கள். இறைவனும் அவர்கள் நம்பிக்கையை வீணாக்குவதில்லை. எந்த வழியிலோ தொடங்கிய செயலை முற்றுவித்து அவர்களை மகிழ்வில் திளைக்க வைப்பான். அடிகளார் வரையில் இதுவே வழக்கமாக ஆகிவிட்டது.

நீண்ட நாட்கள் உடன் இருந்து பழகும் பேறு வாய்த்தும் அடிகளார் திருவருள்பால் கொண்டிருந்த ஊக்கமும் உறுதியும் திடமான நம்பிக்கையும் யாங்கள் இதுகாறும் பெற்றிலம்.

மணிவாசகப் பெருமான், எல்லாம் வல்ல சிவபெருமான் தமக்கு அருள் புரிந்ததன் அருமையை நினையாமற் போனதாகத் தமக்கே இயல்பான அடக்க வுணர்வோடு குறிப்பிடுவதைப் பாருங்கள்:

"மையிலங்குநற் கண்ணி பங்கனே
　　வந்தெனைப் பணிகொண்ட பின்மழக்
கையிலங்குபொற் கிண்ணம் என்றலால்
　　அரியை என்றுனைக் கருதுகின்றிலேன்"

என்று அப் பெருமான் பாடுகிறார்.

மழலை மொழியும் சின்னஞ்சிறு குழந்தையின் கையில் விலையுயர்ந்த பொற்கிண்ணம் ஒன்றினைக் கொடுத்தால், அதனைத் தான் வைத்து விளையாடி மகிழும் பொம்மைகளுள் ஒன்றாகத்தான் நினைக்கும். அரிய வேலைப்பாடும் பெருமதிப்பும் உடையது அக் கிண்ணம் என்று அதன் சிற்றுள்ளம் அறியாது.

அழகரடிகளின் அருமை தெரியாமலும் அவர் தம்மைத் தக்காங்கு பயன்படுத்திக்கொள்ள அறியாமலும் நாட்களைக் கழித்த எமது நிலைமையை அக் குழந்தையின் செயலுக்குத்தான் உவமை கூற முடியும்.

இறைவன் கிட்டுதற்கரிய அருமை உடையவனாக இருப்பினும் உளமுருகித் துதிக்கும் அன்பர்க்கு எளிதின் வந்து அருள் புரியும் அழகனை இருத்தலை எண்ணி உருகும் மணிவாசகப் பெருமான், 'அருமையில் எளிய அழகே போற்றி' என்று அப் பெருமானைப்போற்றி மகிழவார். அழகரடிகளார் அவர்களும் அவர்தம் மாட்சியைத் தம் நுண்உணர்வால் உணர்ந்தார்க்கு அரியராகப் புலப்பட்டார்கள். ஆனால் எளியேமாகிய அடியேம் போன்றார்க்கு மிக எளியராகவே காணப்பட்டார்கள். ஆகவே கட்டுரையின் தலைப்பிற் குறிப்பிட்டபடி அவர்கள் 'அருமையில் எளிய அழகரடிகள்' என்னும் கருத்துக்குப் பொருத்தமாக இருத்தலை உணர்கிறேம்.

அடிகளார் நம் இடையில் வாழ்த்த போதெல்லாம் புலப்படாத அவர்கள் அருமை பெருமைகளெல்லாம் இப்பொழுது எமது சிந்தனையில் இடம் பெற்று வருத்தம் தருகின்றன. எனினும் அடிகளார் நுண்ணுடல் வடிவில் எம்மை நீங்காமல் எம் இடையிலே வாழ்ந்து வருவது போன்றதோர் உணர்வும் வளர்ந்து கொண்டிருக்கிறது. இந்த நல்லுணர்வே எம் போன்றார்க்கு ஊக்கமும் உள்ளத் தெளிவும் செயலாற்றும் துணிவும் இறையுணர்வும் அளித்து வையத்துள் வாழ்வாங்கு வாழ வைக்கும் என்று நம்புவோமாக!

---

## இளவழகைய சொல்லாய்!

*படிப்பழுத்தம் பற்று படபடப்பில் லாப்பேச்சு*
*துடிக்கும் பொருளாழம் தோற்றம்—எடுப்பிவற்றை*
*எங்கே கொடுத்தாய் இளவழக! இன்றகன்றாய்;*
*சங்கத் தமிழன்ப சாற்று.*

*மறைமலை யடிக ளாரின் மரபிலே தமிழைக் காக்க*
*நிறைபுலஞ் செறிந்த நின்னை நேர்பவர் நிலத்தில் உண்டோ?*
*இறையடிக் கன்பு பூண்ட இளவழ கைய சொல்லாய்:*
*உறைவிடம் அருளாக் கொண்ட உன்னையாம் வினவ லாமோ?*

—மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர்

# மொழிஞாயிறு பாவாணரும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியும்

[கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்]

(முன் இதழ் உ௰௪ஆம் பக்கத் தொடர்ச்சி)

உலகத்தின் முதல் தாய்மொழியாகிய தமிழ் மொழியின் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தையும், அதன் இயக்குநர் மேதகு பாவாணரையும் நினைத்ததும் அரசு அவ் வியக்ககத்திற்கு அளித்த அலுவலகச் சிறப்புப் பற்றி எத்துணையோ கற்பனைகள் நம் நெஞ்சில் விரிந்து எழும். இஃது இயற்கை!

வானோங்கி யுயர்ந்த வளமாளிகை! அகன்ற பரப்பு! திறந்த புல்வெளி! சிறந்த இயற்கைச் சூழல்! வனப்பு மிக்க அறைகள்! வாய்ப்பான இருக்கைகள்! தேடிப் பெறுதற் கரிய திருவாம் நூற்குவைகள்! அலுவலகப் பணியாளர்கள்! அறிவுத் துணைகள்! ஏந்து வாய்ப்புகள்! இன்ன வெல்லாம் நெஞ்சத்தில் பளிச்சிடுகின்றன. ஏனெனில் தமிழறிந்த தகவுடைய தமிழமைச்சர்களே முதல்வராகவும் துணைவராகவும் தமிழகத்தை ஆட்சி புரியும் தனிப் பெரும் சீர்த்தியமைந்த காலத்தில் அன்றோ இயக்ககம் உருவாகியது! அதிலும் கல்வித்துறையமைச்சரும் நிதித்துறை அமைச்சருமாகியவர்—தமிழ் நாவலர்—நடமாடும் பல்கலைக் கழகம்—எனப் பாராட்டப் பெறுபவர் அல்லரோ! இந் நிலையில் தமிழ் அன்பர்களும் தமிழ்ப் பற்றாளர்களும் இயக்கக வளமை பற்றி எண்ணி இறும்பூது அடையாமல் இருப்பரோ? ஆனால் நிகழ்ந்தது என்ன?

அகர முதலி இயக்ககத்திற்கு அரசால் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தில் 12’×6’ அளவில் ஓர் அறை கொடுக்கப் பெற்றது. இது நந்தமிழ்த் தாயின் செந்தமிழ்க் கன்னத்தில் அறைந்த முதன்மையான ஓர் அறை. தாயை அறைவதற்கு அவள் தந்த மக்களுக்கு இல்லாத உரிமை, மற்றை எவருக்கே உண்டு?

உலகளாவிய தமிழன்னை வீற்றிருக்க ஒரு மேசை! ஒரு நாற்காலி! பணி செய்ய ஒரு தொண்டர்—போதுமல்லவோ! சின்னஞ் சிறு ‘சங்கப் பலகை’யிலே வீற்றிருந்த செந்தமிழ் அன்னைக்கு இப் பேரிடம் போதாதோ?

பாவாணரின் அகர முதலி இயக்ககம், பல்கலைக் கழகப் பக்கமும் பார்த்தல் ஆகாது! தமிழ் வளர்ச்சித் துறையை நெருங்கவும் தகாது! தமிழ் ஆட்சி மொழித் துறையை அணுகவும் ஆகாது! உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தை ஒட்டவும் கூடாது! கல்வித்துறை இயக்ககங்களைக் காணவும் தகாது! புதுவதாகக் கட்டப் பெற்ற எந்த அரசு மாளிகையிலும் புகுதலும் பொருந்தாது, அங்கெல்லாம் அகர முதலி இயக்ககத்தை வைக்க இடமில்லை! அறவே இல்லை! ஏனெனின், 'இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டும்' இறையும் 'இருந்தமிழே உன்னால் இருந்தேன்' என்னும் தமிழ்ப் பற்றும் 'இருந்தபடி இருக்க'த் தானே வைக்கும்! அதையே செய்தது.

"ஒருவர் படுக்கலாம்; இருவர் இருக்கலாம்; மூவர் நிற்கலாம்" என்னத்தக்க அறையில் தமிழ்த்தாயின் அகர முதலி இயக்ககம் தனிக் கோலோச்சத் தொடங்கியது. தட்டச்சும் சுருக்கெழுத்தும் பயின்ற ஒருவர் அலுவலகத் துணையாய் அமர்த்தமாகி ஆங்கு 'வேலை இல்லாமையால்' வேறு பணிக்கு மாற்றவும் பெற்றார். 'நாலாண்டில் நிறைவிக்க வேண்டிய பணி' என ஆணையிடப் பெற்ற அமைப்புக்கு நாலாம் ஆண்டின் இறுதியிலும்—ஏன் இன்று வரையும்—வேண்டும் வாய்ப்புகளை உருவாக்கித் தரவில்லை. அதன் பணி நிறைவேற்றத்தைப் பகரவும் வேண்டுமோ?

இயக்ககத்திற்குத் தரப்பெற்ற அறையில், இயக்குநருடன் தொகுப்பாளர் ஒருவரை அமர்த்தம் செய்தாலும் இடம் போதாதே! ஆதலால் பாவாணர், நிலைமையை அரசுக்கு எழுதினார்; பலபேர் பல்கால் வலியுறுத்தினர்; இவற்றால் 'கன்னிமாரா' நூல்நிலைய வளாகத்தில் ஓரிடம் ஒதுக்க அரசு எண்ணியது!

"நல்ல ஏற்பாடு! புதிய ஏற்பாடு! காலம் கழித்தேனும் கண்ணைத் திறந்து பார்க்கின்றதே அரசு" எனக் கன்னித் தமிழர்க்கு உண்டாகும் மகிழ்ச்சி! "கன்னிமாரா நூலகம் உலகப் புகழ் வாய்ந்த பெரிய நூலகம் ஆயிற்றே; அகர முதலிப் பணிக்கு மூல வைப்பாக இருந்து முழு உதவி புரியுமே! காலங் கழித் தேனும் அரசு கருத்துடன் கடனாற்றியிருக்கிறது" என்னும் களிப்பு மேவிடும் பைந்தமிழ்ப் பற்றாளர்க்கு! இஃது இயற்கை தானே!

அகர முதலி இயக்ககத்திற்குக் கொடுக்கப் பெற்ற அலுவலக இடம் கன்னிமாரா நூல்நிலையப் பகுதியே அன்றி, அந் நூல் நிலையக் கட்டடத்துள் ஒரு பகுதி அன்றே! அதன் காற்றுப் படவும் கனிந்து இடம் தாலாமா? நூல் நிலையத்திற்கு எட்டத்தில்

தென்மேற்குக் கடை கோடியில் ஓர் ஓட்டை ஓட்டுக் கட்டடம் ஒதுக்கப் பெற்றது! புதர்ச் செடிகளுக்கு இடையே அமைந்த அந்தக் கட்டடத்தின் தளம் பழுது! ஓடு ஒழுக்கல்! தடுப்பற்ற ஒரு நெட்டறை! இன்னபிற நலன்களனைத்தும் ஒருங்கே அமைந்தது அகர முதலிக்கு இரண்டாம் முறையாக ஒதுக்கப் பெற்ற கட்டடம். இது செந்தமிழன்னையின் மெல்லிய கன்னத்தில் கொடுக்கப் பெற்ற இணையற்ற 'இரண்டாம் அறை!' அவளுக்கு இரண்டு கன்னங்கள் தாமே உண்டு! அதனால் இன்னும் ஓர் அறை கொடுக்காமல் அப்படியே இருக்கிறது!

அகர முதலிக்கு அருளிய அறையின் சீர்மையைப் பற்றிப் பல சொல்ல வேண்டா! ஒன்று போதும்! மேலை நாளில் நூல் நிலையத்திற்கு வரும் அலுவலர்கள் குதிரைகளிலோ குதிரை வண்டிகளிலோ வருவர். அவர்கள் ஆங்கிலவராம் அலுவலர்கள். அவர்கள், குதிரைகளைக் கட்டிப் புல்போடுதற்குக் கட்டடம் வேண்டும். வெள்ளைக் காரர்களின் குதிரை வெளியே வெயிலில் நிற்குமா? அக் குதிரைகளைக் கட்டி வைத்தற்குக் கட்டப் பெற்ற 'கொட்டடி'தான். தமிழ்த் தாயின் 'தவப் புதல்வர்களால் தமிழ்த் தாய்க்கு இணையற்ற அணிகலமாகிய செந்தமிழ்ச் சொற் பிறப்பியல் அகர முதலி இயக்ககத்திற்கு அருளப் பெற்றது. குதிரைகளுக்குக் கொள்ளும் புல்லும் போட்டுத் தின்ன வைத்த நிலைப் பெட்டிகள் இன்றும் மாறா நினைவுச் சின்னமாய்த் திகழ்வதை ஆவலுடையார் நேரில் கண்டு மகிழலாம்! பூரிப்படையலாம்! 'உயிரோடே ஒழித்து விட்டு' நினைவுச் சின்னம் எழுப்பிப் போற்றுவது தானே நம்மவர் நயத்தகு தொண்டு!

அகர முதலித் திட்டத்தின் மேல் வேண்டா வெறுப்பா? வேண்டும் என்றே செய்யும் இழிவா? செயலாற்ற மாட்டாத விளங்காத்தனமா? அலுவலர்களின் வெறுப்பின் வெளிப்பாடா? 'திருப்புன்கூர் நந்தி மறைப்பன்ன' இடைத் தடுப்பா? தமிழ்ப் பகைவர் உட்புகுந்தாற்றும் உருக்குலைப்பா? பாவாணர் மேல் பகைப்பா? எல்லாமா? ஒன்றுமே புரியவில்லை. உறங்குபவரை எழுப்பி விடலாம்! உறங்குபவராக நடிப்பவரை எழுப்பிவிட இயலுமோ? வெளிக்கேடரை விலக்கலாம்! உட்கேடரை ஒழிக்க இயலுமோ? "பழுதெண்ணும் மந்திரியின் பக்கத்துள் தெவ்வோர், எழுபது கோடி யுறும்" என்றார் பெருநாவலர். அதனை எண்ணி நயப்பதா? நகைப்பதா?

உலகிலும் நம் நாட்டிலும் பாவாணர் அகர முதலிதானா, ஒரோ ஒன்றாய்த் தோன்றியது? எத்தனை அகர முதலிகள் உள்ளன; ஒவ்வொரு மொழியாளரும் திட்டமிட்டுச் செய்துள்

ளனரே! எப்படி யெல்லாம் அவ் வகர முதலிகளுக்கு வாய்ப்புகள் செய்யப் பெற்றுள்ளன!

ஆக்சு போர்டு ஆங்கிலப் பேரகர முதலி :

1858ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 7ஆம் நாள் இவ் வகர முதலிப் பணி தொடங்கியது. 1929ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்கள் 19ஆம் நாள் பணி முடிந்தது. ஆகலின் இப் பணி நிகழ்ந்த காலம் 70 ஆண்டுகள்.

நான்கு பதிப்பாசிரியர்கள் தலைமையின் கீழ், நானூற்றுவர் நிலையாய் அமர்ந்து பணி செய்தனர். சென்ற செலவு 30,50,00 பவுண்.

சமற்கிருத அகர முதலி :

1948ஆம் ஆண்டில் தொடங்கியது இவ் வகர முதலிப் பணி. 28 ஆண்டுகளுக்குப் பின் 1976இல் முதன் மடலத்து முதற் பகுதி 216 பக்க அளவிலும், 1977இல் முதன் மடலத்து இரண்டாம் பகுதி 288 பக்க அளவிலும், வெளிவந்துள்ளன. பணி தொடர்கின்றது; 1990இல் நிறைவுறலாம்; அன்றி நீளலாம். இதன் பதிப்புப் பணியாளர் 22 பேர்.

பதிப்புச் செலவுத் தொகையாக இந்திய அரசு உருபா ஒரு கோடி வழங்கியுள்ளது. பல்கலைக் கழக நல்கைக் குழு (U. G. C.) மராத்திய நாட்டு அரசு, பூனாப் பல்கலைக் கழகம் ஆகியவை பெருந் தொகை வழங்கியுள்ளன. ஒன்றிய நாட்டினங்களின் கல்வியறிவியல் பண்பாட்டு அமைப்பகம் (UNESCO) அச்சீடு முடியும் வரை ஆண்டு தோறும் பெருந்தொகை வழங்க இசைந்துளது. பாரிசுச் சமற்கிருதக் கழகம் உருபா இரண்டு கோடிக்கு மேலும் வழங்கியுள்ளது.

மலையாள அகர முதலி :

1953இல் தொடங்கப் பெற்றது இவ் வகர முதலிப் பணி. பன்னீராண்டுகளுக்குப் பின் 1965ஆம் ஆண்டில் முதன் மடலமும் (அ) 1970ஆம் ஆண்டில் இரண்டாம் மடலமும் (ஆ - ஔ) 1976அம் ஆண்டில் மூன்றும் மடலமும் (க - கீ) வெளிவந்துள்ளன. பணி தொடர்கின்றது. நிலையாக 36 பேர்கள் பணியாற்றுகின்றனர். கேரள அரசு, கேரளப் பல்கலைக் கழகம் இவற்றின் இணைந்த அரவணைப்பில் இயல்கின்றது.

**சென்னைப் பல்கலைக் கழகத் தமிழகர முதலி :**

1905ஆம் ஆண்டு இவ் வகர முதலிப் பணி தொடங்கியது. 1931ஆம் ஆண்டு இறுதியுடன் முடிந்தது. ஆக மொத்தம் 26 ஆண்டுகள் பணி நிகழ்ந்தது. நிலையாக இருந்து பணி செய்தவர் அறுவர்; இடை இடை அமர்ந்து பணி செய்தவர் இருவர் மூவர். சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைப் பணியாளர் உதவியும் உழைப்பும் ஒன்றியிருந்தன.

எடுத்துக்காட்டாகக் கூறப்பெற்ற இவற்றுடன் பாவாணர் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலிப் பணிக்குக் கிடைத்த உதவியையும் ஒப்பிட்டுக் காணல் வேண்டும். அன்றியும் பாவாணர் தம் அகர முதலிப் பணியின் தனிப்பெரும் சிறப்பையும் ஒப்பிட்டு அறிதலும் வேண்டும்.

**பாவாணர் அகர முதலியின் தனித் தன்மைகள் :**

(1) இந் நாள் வரை வெளிவந்துள்ள தமிழகர முதலிகளி லெல்லாம் இல்லாத எல்லாச் சொற்களையும் இயன்ற வரை எடுத்துக்காட்டிப் பொருள் கூறுதல்.

(2) ஏனை அகர முதலிகளிலுள்ள தவறான சொல் வடிவங் களைத் திருத்துதல்.

(3) ஏனை அகர முதலிகளில் உள்ள சொற்களுக்கு விடுபாடுள்ள பொருள்களை யெல்லாம் இயன்றவரை எடுத்துக் கூறுதல்.

(4) ஏனை அகர முதலிகளில் உள்ள தவறான பொருள்களைத் திருத்துதல்.

(5) எல்லாப் பொருள்களையும் ஏரண முறைப்படி (தருக்க முறைப்படி) வரிசைப்படுத்திக் கூறுதல்.

(6) எல்லாச் சொற்களுக்கும் இயன்றவரை திரவிட-ஆரிய-இனச் சொற்களைக் காட்டுதல்.

(7) எல்லாச் சொற்களுக்கும் இயன்றவரை வேருடன்கூடிய வரலாறு வரைதல்.

(8) ஏனை அகர முதலிகளிற் குறிக்கப்பெற்றுள்ள தவறான மூலங்களைத் திருத்துதல்.

இவ் வெட்டுவகைத் தனித் தன்மையும் போற்றிக் கொள்ளப் பெறும். சொற்பிறப்பியல் அகர முதலியால் பெறும் பயன் பெரிதாம்.

செந்தமிழ்ச் சொற்களுக்குச் சொன் மூலம் மட்டுமன்றிச் சொன் மூலத்திற்கு மூலமான ஆணிவேர், பக்கவேர், சல்லிவேர் மூலங்களும் காணலாம். தமிழ்மொழியில் இருந்து உலக மொழிகளுக்குக் கிளைத்துச் சென்ற இனமொழி மூலங்களும் காணலாம். அவற்றுக்குச் சொற்பிறப்பியல் நெறியிடுகளை (Principles of Etymology) வகுத்துக் காட்டுதலை அறியலாம். சமற்கிருதம் உள்ளிட்ட இந்து ஐரோப்பிய மொழிகள், சீனம், சப்பானியம், மங்கோலியம், ஆப்பிரிக்கம், ஆத்திரேலியம் முதலிய மொழிகளின் அடிப்படை சொல்வளத்தில் தமிழ்ச் சொற்களின் வேர் அமைந்துள்ளமையைத் தெரியலாம்; செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் நெறிமுறைகள் ஒரு தனி மடலமாக வெளிவருதலால் அந் நெறிமுறைகளைத் தெளியலாம். இந்திய அகர முதலிகளுக்கு வழிகாட்டியாகவும், உலக மொழிகளின் தாய், தமிழ் மொழியே என்பதை அறிவியல் முறையில் நிறுவிக் காட்டுவதாகவும் இருத்தலால்மகிழலாம்.

இத்தகைய பெருமை வாய்ந்த திட்டங்களோடு கிளர்ந்த அகர முதலிக்குத் தமிழ்நாட்டு அரசும், கல்வித் துறையும், பல்கலைக் கழகங்களும், தமிழ்நாட்டுச் செல்வர்களும் எத்தகைய ஆக்கமும் ஊக்கமும் நல்கியிருக்க வேண்டும்! இத் திருப்பணிக்குத் தம்மையெலாம் ஆளாக்கிப் பெருமிதம் உற்றிருத்தல், பிறவிப் பேருகக் கொண்டிருக்க வேண்டும் அன்றோ! ஆனால் ஒட்டகத்திற்கு ஒரு பக்கமா கோணல்!

சொற்பிறப்பியல் அகர முதலி இயக்ககத்தைத் தோற்றுவித்துப் பாவாணரை இயக்குநராக அமர்த்திய நற்செயலைச் செய்தது தி. மு. க. அரசு; அவ்வரசு அணுக்கத் துணையாக இருந்து உலக ளாவிய புகழுக்குத் தன்னை ஆளாக்கிக் கொள்ளவில்லையே! வித்தை ஊன்றிவிட்டு நீரும் உரமும் காவலும் பேணவில்லையே!

“அரசியல் அலுவலகப் பணிகள், ஒரு நாளில் நடக்க வேண்டியவற்றிற்கு ஓராண்டு செல்கின்றது.”

“ஒன்றை அரசிடம் கொடுத்து மீளப் பெறுவது பூதத்திடம் கொடுத்ததைப் பெறுவது போன்றது.”

“தமிழைப் பிடித்த நோய்முகன் (சனியன்) இன்னும் அதை விடவில்லை.

“கேரளாப் பல்கலைக் கழகத்தில் சூரநாடு குஞ்சன் பிள்ளை தலைமையில் தொகுக்கப் பெறும் மலையாள அகர முதலி அலுவலகப் பணியர் நாற்பத்தைவர். இதைக் கலைஞர்க்குத் தெரிவிப்பேன்.” 19—7—75இல் பாவாணர் குறிப்பிடும் செய்திகள் இவை.

“அகர முதலி முடிய எத்துணைக் காலஞ் செல்லும் என்று மாண்புமிகு கல்வியமைச்சர் வினவினர். பெருக்கமாய்ச் செய்தால் 12 ஆண்டென்றும், சுருக்கமாய்ச் செய்தால் 30—4—78 இற்குள் என்றும் சொன்னேன். சுருக்கமாய் வேண்டாமென்றும், 12 ஆண்டு மிக நீண்டதென்றும் விரைந்து முடிக்க வேண்டும் என்றும், என் காலத்திற்குப்பின் வேறெவரும் எச்சத்தைத் தொடர்ந்து செய்ய இயலா தென்றும் அமைச்சர் குறிப்பிட்டார். அவர் குறிப்பறிந்து இறைவன் அருளால் இன்னும் பன்னீராண்டிருப்பே னென்னும் நம்பிக்கை எனக்குண்டென்றேன். அவர் நம்பவில்லை. இன்னும் நாலாண் டிற்குள் முடித்துவிட வேண்டுமென்பது அவர் கருத்து. ஆகலின் முதன் மண்டலம் வெளிவந்தபின் அவர் கருத்து மாறத்தான் செய்யும். அங்ஙனம் மாற்றுவது நம் கடமை. இயன்றவரை விரைந்து பணி செய்வதே நாம் செய்யக் கூடியது. இறைவனருள் நம்பக்கந்தா னிருக்கும்”—இதனைப் பாவாணர் 23—10—75இல் குறிப்பிடுகிறார்.

நான்காண்டு எல்லைக்குள் அகர முதலியைப் பெருக்கமாக முடிக்க வேண்டும் என்று விரும்புவதும், பாவாணர் காலத்திற்குப் பின் வேறெவரும் எச்சத்தைத் தொடர்ந்து செய்ய இயலாது என்று உணர்ந்து உரைப்பதும் மேற்கொண்ட அமைச்சர் எத்தகைய ஏந்துகளை உடனே செய்திருக்க வேண்டும் !

திரவிடச் சொற்றொகுப்பாளர் ஒருவர் அமர்த்தமும், தமிழ்ச் சொற்றொகுப்பாளர் ஒருவர் அமர்த்தமும் ஆயின. பல்வேறு சிக்கல்களால் தமிழ்ச் சொற்றொகுப்பாளர் தாம் பணியில் ஒட்டி யிருக்க இயலாமல் விட்டுப் பழைய பணிக்கே திரும்பினர். திரவிடச் சொற்றொகுப்பாளர் ஒருவர் மட்டுமே பாவாணர்க்குத் துணையாய் இருந்தார்; இருக்கிறார் !

(தொடரும்)

———

## தமிழாக்கம் வேண்டும்

ஆங்கிலம் முதலிய அயல் மொழிகளிலுள்ள இயற்கைப் பொருள் நூல்களையும், உயர் நூல்களையும் கடவுள் நூல்களையும் தமிழில் மிகுதி யாக மொழிபெயர்த்து அவற்றைப் பயிலும்படி செய்தல் வேண்டும்.

—மறைமலையடிகள்.

# 'கவையன்'

## (Anabas Scandens)

### (முன் இதழ்க் கட்டுரையின் பிற்சேர்க்கை)

[திரு. பி. எல். சாமி, ஐ. ஏ. எசு.]

கவையன் என்ற கட்டுரையை எழுதிய பின் எனக்கு Flora and Fauna in Sanskrit Literature என்ற நூல் கிடைத்தது. இந்த நூல் சனவரி 1980ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. இந்த நூலில் கவயி, கவிகா என்ற மீனின் பெயர்கள் கூறப்பட்டுள்ளன. வடமொழியில் மிகப் பிற்காலத்திய நூல்களில் இப் பெயர்கள் காணப்படுவனவாகக் கூறப்பட்டுள்ளது. கி. பி. 1129ம் ஆண்டு சோமேஸ்வரன் என்ற சாளுக்கிய அரசன் எழுதிய 'மானசல்லோசத்தில்' (Manasallosa of Someswara) என்ற நூலின் 'மத்ஸ்ய விநோதா' என்ற பகுதியில் 'கவயி' என்ற சொல் ஒரு மீனின் பெயராகக் கூறப்பட்டுள்ளது. மற்றும் வடமொழியில் இயற்றப் பெற்ற இராஜ நிகண்டு என்ற பிற்கால நிகண்டு நூலில் 'கவிகா' என்ற பெயர் காணப்படுகின்றது. நூலாசிரியர் பானர்சி (Banerjee) இந்த மீன் பெயர்களைக் கூறினாரே அன்றி அறிவியற்படி இந்த மீன் எது வென்று ஆராய்ந்து கூறவில்லை. ஆனால் சொல்லாக்கத்தை விளக்கும்போது கு+வை சேர்ந்த 'போ' (to go) என்ற பொருளில் 'கவிகா' என்ற பெயர் வந்ததாகக் கூறியுள்ளார். கு என்ற சொற்குப் பொருளாக நீர், நிலம் ஆகியவற்றைக் கூறியுள்ளார். இந்தச் சொற்பிறப்பு ஆராய்ச்சி பொருத்தமற்றது.

வடமொழி ஆராய்ச்சி அறிஞர்கள் வேற்றுமொழிச் சொற்களுக்கும் வடமொழியிலிருந்து எப்படியாவது வலிந்து விளக்கம் கூறுவது வழக்கமாகும். ஆனால் வடமொழியை முதலில் பயின்று புலமை பெற்றுப் பின்னர் திராவிட மொழிகளை ஆராய்ந்த மேலை நாட்டு அறிஞர்களான டாக்டர் மேனே, டாக்டர் பர்ரோ ஆகியவர்கள் இந்த வகை ஆராய்ச்சிகளைத் தகர்த்தெறிந்தனர். இந்த மீன் எதுவென்று தெரிந்து கொள்ளாமல் சொற்பிறப்பு வரலாறு கூறுவது தவறாகும். இந்திய-ஆரிய (Indo-Aryam) பேச்சு வழக்குகளில் வரும் இந்த மீனின் பெயருக்கு உண்மையான விளக்கம் இலங்கைத் தமிழ்ப் பேச்சு வழக்கில் காணப்படுவது மிகவும் வியக்கத்தக்கதாகும். தமிழிலும் திராவிட மொழிகளிலும் வீழ்ந்துபட்ட ஒரு வியப்பான மீனின் பெயர் இலங்கைத் தமிழில் காணப்படுவதைக் கவனிக்க வேண்டும். இதுபோன்ற பல தூய பொருள் பொதிந்த தமிழ் வழக்குகள் இலங்கையிலும் தமிழகத்திலும் நாட்டார் மக்கள் வழக்கில் காணப்படுகின்றன. அவ் வழக்குகள் வீழுமுன் ஆராய வேண்டியது நம் கடமையாகும்.

5—2—81 ஆம் நாளன்று வெளிவந்த ‘இந்து’ நாளிதழில் 33 அடி நீளமும் 17 அடி அகலமும் உடைய திமிங்கிலத்தைக் கோடிக்கரையில் மீனவர்கள் பிடித்ததைப் பற்றிய செய்தி வந்துள்ளது. இச் செய்தியிலிருந்து வங்காளக் குடாக் கடலிலும் திமிங்கிலங்கள் வாழ்கின்றன என்பது தெளிவாகின்றது. புதுச்சேரிக் கடற்கரையில் 1962ஆம் ஆண்டு சூலைத் திங்கள் 13 ஆம் நாளன்று 45 அடி நீளமும் 22 அடி சுற்றளவுமுள்ள திமிங்கிலம் கடற்கரைக்கு 20 மைல் தொலைவில் கிடைத்தது. மீனின் வாய் மட்டும் 10 அடி நீளம் இருக்கும். வாயைப் பிளந்தபோது 7 அடி உயரம் இருந்தது. இதன் பெயரைப்பற்றி நான் உசாவியபோது பனைஉளுவை, ‘பனைவாளை’ இனத்தைச் சேர்ந்ததென்றும் ‘உறவி’ என்றும் அழைத்தனர். இந்த மீனை விசைப் படகில் பிடித்தனர். வலையில் சிக்கியது. குமரிமுனையில் 1970ஆம் ஆண்டு விசைப் படகிலிருந்து போட்ட வலையில் 22 அடி நீளமும் 12 அடி சுற்றளவுமுள்ள திமிங்கிலம் கிடைத்தது. இதை ‘அம்மணி உளுவை’ என்று மீனவர்கள் அழைத்தனர். மற்றும் சிறு திமிங்கிலங்கள் அரிதாகத் தாமாகவே கடற்கரையில் ஒதுங்குவதுண்டு. நற்றிணையில் (239) பரதவர் தாம் வருந்தாது பெற்ற பெருமீனைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது. இந்தப் பெருமீன் தானாகவே ஒதுங்கும் சிறு திமிங்கிலங்களே. ஐந்தாண்டுகளுக்கு முன்னர் மண்டபம் அருகே கூட்டமாகப் பல சிறு திமிங்கிலங்கள் (Pilot whales) கடற்கரையில் ஒதுங்கி இறந்ததைப்பற்றி டாக்டர் மில்லர் எனக்கு எழுதியுள்ளார். அவ்வாறு சுறுமீன் எளிதில் கிடைக்காது, கடற்கரையிலும் ஒதுங்காது.

(1) The Marine and Fresh water Fishes of Ceylon–San. S. R. Munroe published for Department of External Affairs, Canbera.

(2) Science Reporter Vol. 15, July 1978 No. 7. Climbing perch.

———

## மனத்தை மூடுக!

*நாற்றம் அடித்தால் மூக்கைப் பொத்துகிறோம்; தூசி நெருங்கினால் கண்ணைப் பொத்துகிறோம்; அதிரொலி கேட்டால் காதைப் பொத்துகிறோம்; வேண்டா உணவைத் திணித்தால் வாயைப் பொத்துகிறோம்; வாடை வாட்டினால் உடலைப் போர்த்துகிறோம்;*

*—ஆனால் அருவருக்கத்தக்கவற்றை நினையாமல் மனத்தை மூடிக் கொள்கிறோமா?*

—கலைமணி

# "நேர், நிரை, நேர்பு, நிரைபு, ஆகிய அசைகளின் அலகுகள்"

[சுந்தரசண்முகனுர், புதுச்சேரி]

(பரல் ௫, உக௮ஆம் பக்கத் தொடர்ச்சி)

இனி, நச்சினர்க்கினியரின் உரைப் பகுதியும் எடுத்துக் காட்டுகளும் வருமாறு:

"நேரின் பின் உகரம் வருதலின் நேர்பு; நிரையின் பின் உகரம் வருதலின் நிரைபு – என ஆட்சியும் குணமும் காரண மாகப் பெற்ற பெயராதல் மேற்கூறியவற்றுட் காண்க.

(எ - டு.) வண்டு, நாகு, காம்பு;
மின்னு, நாணு, தீர்வு—

நேரசை மூன்றன் பின்னும் இருவகை உகரமும் வந்து நேர்பு அசையாயிற்று.

வரகு, குரங்கு, மலாடு, மலாட்டு;
இரவு, புணர்வு, உலாவு—என

நிரை அசை நான்கின் பின்னர்க் குற்றுகரமும், நிரைபு அசை மூன்றின் பின்னர் முற்றுகரமும் வந்து நிரைபு அசை யாயிற்று. குறினெடில் ஒற்றின்பின் வந்த முற்றுகரம் உளவேற் காண்க."

என்பது நச்சினர்க்கினியரின் உரைப் பகுதி. இவர், குற்றுகரம் வந்த மூவகையான நேர்பு அசைகளுக்கும் முற்றுகரம் வந்த மூவகையான நேர்பு அசைகளுக்கும் முதலில் காட்டுகள் தந்துள்ளார். பின்னர், குற்றுகரம் வந்த நால்வகை நிரைபு அசை களுக்கும் முற்றுகரம் வந்த நால்வகை நிரைபு அசைகளுக்குள் முதல் மூன்றுக்கும் காட்டுகள் தந்துள்ளார். குறில் நெடில் ஒற்றின் பின் முற்றுகரம் வரும் நான்காவது நிரைபு அசைக்கு இவர்க்கு எடுத்துக்காட்டு கிடைக்கவில்லை போலும்! எனவே, "குறினெடில் ஒற்றின்பின் வந்த முற்றுகரம் உளவேற் காண்க" —என நமக்கு வேலை கொடுத்துவிட்டார். உரையாசிரியர்கள் மற்றையோரும் இதற்கு எடுத்துக்காட்டுத் தந்தாரிலர். இதற்கும்

எடுத்துக்காட்டு உண்டு. இதற்கு நாம் தரக்கூடிய எடுத்துக் காட்டு 'உராய்வு' என்பதாகும். எனவே, இப்போது நிலைமை தெளிவாகலாம்.

இனி, நேர் அசை ஓரலகும் நிரை அசை ஈரலகும் பெறும் என்பதை ஆராயப் பயணத்தை மேலும் தொடரலாம். 'தெரிந்ததி லிருந்து தெரியாததற்குச் செல்லுதல்' என்னும் உளவியல் முறைப்படி (Psychological Method), நாம் இப்போது ஆராய்ந்து தெரிந்து வைத்துள்ள—நேர்பு அசை மூன்று அலகும் நிரைபு அசை நான்கு அலகும் பெறும்—என்னும் செய்தியிலிருந்து, இன்னும் ஆராய்ந்து தெரிந்துகொள்ளாத—நேர் அசை ஓர் அலகும் நிரை அசை ஈரலகும் பெறும்—என்னும் செய்திக்குச் செல்லலாம்.

தொல்காப்பிய உரையாசிரியர்கள், நேர்பு அசை மூன்று என்று கூறி—அந்த அசைக்கு உரிய எடுத்துக்காட்டுகளை மூன்று வகைக்குள் அடக்கியிருப்பதையும், நிரைபு அசை நான்கு என்று கூறி—அந்த அசைக்கு உரிய எடுத்துக்காட்டுகளை நான்கு வகைக்குள் அடக்கியிருப்பதையும் மேலே கண்டுள்ளோம். இந்த இரண்டு அமைப்புகளையும் அடிப்படையாக வைத்துக்கொண்டு, நேர் அசைக்கு உரிய எடுத்துக்காட்டுகளை யெல்லாம் ஒரு வகைக் குள்ளும், நிரை அசைக்கு உரிய எடுத்துக்காட்டுகளை யெல்லாம் இரு வகைக்குள்ளும் அடக்கிக் காண வேண்டும். இல்லையேல், தொல்காப்பிய உரையாசிரியர்களையும், யாப்பருங்கல உரையாசிரிய ரையும், அவிநய நூலாசிரியரையும், இன்னோர் பிறரையும், ஒன்றும் அறியாதவர்களாக ஆக்கியவர்களாவோம். எனவே, இதைத் தவிர வேறு வழியில்லை. இனிச் செய்திக்கு வருவோம் :

க, கா, கல், கால்—என்பன நேர் அசைக்கு உரிய எடுத்துக் காட்டுகளாகும். இவற்றுள், 'க' என்னும் தனிக்குறிலை ஒலிப்ப தற்கும் ஒரே ஒரு ஒலி முயற்சி தேவைப்படுகிறது; 'கா' என்னும் தனி நெடிலை ஒலிப்பதற்கும் ஒரே ஒரு ஒலி முயற்சி தேவைப் படுகின்றது. அடுத்து, தனிக்குறிலோடு ஒற்று சேர்ந்த 'கல்' என்பதை ஒலிக்கவும் ஒரே ஒரு ஒலி முயற்சியே தேவைப்படுகிறது. தனி நெடிலோடு ஒற்று சேர்ந்த 'கால்' என்பதை ஒலிக்கவும் ஒரே ஒரு ஒலி முயற்சியே தேவைப்படுகிறது. மீண்டும்—மீண்டும் ஒலித்து—ஒலித்துப் பார்த்தால் உண்மை விளங்கும். எனவே, இந்த விளக்கத்தைக் கொண்டு, நேர் அசை ஒரே வகை அலகு பெறும், என்னும் செய்தியைப் புரிந்துகொள்ளலாம். இங்கும் அலகு என்பதற்கு முன்னால் 'வகை' என்னும் சொல்லைச்

சேர்த்துக்கொள்ள வேண்டும். இனி நிரை அசைக்குச் செல்லலாம்.

அணி, இரு, அணில், இருல்—என்பன நிரை அசைக்கு உரிய எடுத்துக்காட்டுகள் ஆகும். இவற்றுள், 'அணி' என்னும் குறில் இணையையும் 'இரு' என்னும் குறில் நெடிலையும் ஒலிக்க ஒரே வகை முயற்சி தேவைப்படுகிறது. அணி—அணி—அணி; இரு—இரு—இரு—என ஒலித்துப் பார்க்கின் ஒரே வகை ஒலி முயற்சியே தேவைஎன்பது புலனாகும். இந்தக் குறில் இணையோடும் குறில் நெடிலோடும் ஒற்றுச் சேர்ந்த அணில், இருல்—என்பன வற்றை ஒலிக்க வேறொரு வகை ஒலி முயற்சி தேவைப்படுகிறது. இங்கே அணி, இரு—என்பவற்றோடு ஒற்றுச் சேர்ந்த தனால், அணில், இருல் என்பவற்றை அ—ணில், அ—ணில், அ—ணில் என்றும், இ—ருல், இ—ருல், இ—ருல் என்றும் விட்டிசைக்க வேண்டியுள்ளமை கூர்ந்து நோக்கின் புலனாகும். அஃதாவது: ஒற்றுச் சேர்ந்ததால், 'அணி' என்பதிலுள்ள 'அ' என்பதை விட்டு 'ணி' என்பது சிறிது விலகி 'ல்' என்னும் ஒற்றோடு சேர்ந்து 'ணில்' எனப் பிரிவினையான ஒலி பெறுவதையும், இதேபோல், 'இரு' என்பதிலுள்ள 'இ' என்பதை விட்டு 'ரு' என்பது சிறிது விலகி 'ல்' என்னும் ஒற்றோடு சேர்ந்து 'ருல்' எனப் பிரிவினையான ஒலி பெறுவதையும், மீண்டும்—மீண்டும் ஒலித்து—ஒலித்துப் பார்க்கின் புரிந்துகொள்ளலாம். எனவே, நிரை யசையின் நான்கு எடுத்துக்காட்டுகளுள், அணி, இரு போலக் குறிலிணையும் குறில் நெடிலுமாக உள்ளவை ஒரு வகை ஒலி முயற்சியும், அணில், இருல் போலக் குறிலிணையோடும் குறில் நெடிலோடும் ஒற்றுச் சேர்ந்தவை வேறொரு வகை ஒலி முயற்சியும் பெறுவதால், நிரை அசை இருவகை அலகு பெறும் என்னும் செய்தி புரியவரும். இங்கும் அலகு என்பதற்கு முன்னால் 'வகை' என்னும் சொல்லைச் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

இதுகாறுங் கூறியவற்றால் நேரசை ஓரலகும், நிரை அசை ஈரலகும், நேர்பு அசை மூன்றலகும் நிரைபு, அசை நான்கு அலகும் பெறும் என முன்னோர் மொழிந்திருப்பதின் உட்கிடை இப்போது விளங்கலாம்.

புதுச்சேரியில் ஒருநாள் நடைபெற்ற ஓர் இலக்கணக் கூட்டத்துக் கலந்துரையாடலில்,

''அலகிடுங்கால் நேர் அசை ஓர் அலகு, நிரை யசை இரண்டு அலகு, நேர்பு அசை மூன்று அலகு, நிரைபு அசை நான்கு அலகு பெறும்''— (இளம்பூரணர் உரை)

என்பதற்கு விளக்கம் கூறுமாறு பல ஆண்டுகளாகப் பலரை வினவியும் தக்க பதில் கிடைக்கவில்லை என்பதாகத் தமிழறிஞர் ஒருவர் தெரிவித்து, கூட்டத்தினருள் யாராவது இதற்கு விளக்கம் கூறுமாறு வேண்டினர். அடுத்தடுத்த கூட்டங்களில் இது சார்பாகச் சிலர் கூறியவற்றை ஈண்டுத் தெரிவிக்கிறேன் :—

'இது வடமொழி அமைப்பைப் பின்பற்றி எழுதியதாக இருக்க வேண்டும்; எனவே, வடமொழி வாணர்களிடம் இது பற்றிக் கேட்டுத் தெரிந்துகொள்வது நல்லது'—என்பது அறிஞர் ஒருவரின் கூற்று. தெளிவாக விளங்கும் இச் செய்திக்கு வடமொழி வாணரின் உதவி தேவையில்லை என்பது என் கருத்து. கைப் பூணுக்குக் கண்ணாடி எதற்கு?

'இசைக் கலை அமைப்பின்படி நோக்கினும் இது பொருந்துவதாயில்லை' எனபதாக ஒருவரும், இசைக்கலை அமைப்பின்படி ஆராய்ந்தால் இது பொருந்துவதாகும்' என்பதாக வேறொருவரும் கூறினர். இரண்டாமவர், இசைக்கலை அமைப்பின்படி பொருத்திக் காட்டிக் கட்டுரை வரைந்து விளக்கின் பயன் உள்ளதாயிருக்கும்; அவர் அதனை இன்னும் செய்யவில்லை.

"முதலாவது (ஒன்ருவது) அசை, இரண்டாவது அசை, மூன்ருவது அசை, நான்காவது அசை என்று எண்ணிக்கையிட்டுக் காட்டுவதற்காக, ஓரலகு, ஈரலகு, மூன்றலகு, நான்கலகு என்று கூறப்பட்டுள்ளது. இவ்வாறு எண்ணிக்கையிடுவது தமிழில் உண்டு. பரிபாடலில், "ஒன்றென இரண்டென மூன்றென நான்கென ஐந்தென ஆறென ஏழென, எட்டெனத் தொண்டென" என எண்ணிக்கையில் கூறியிருப்பது ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது"— என்பதாகத் தமிழறிஞர் மற்ருெருவர் கூறினர். இது பற்றி என் கருத்தாவது :—

பரிபாடலுக்கு உரையெழுதியுள்ள பரிமேலழகர், ஐம்புலன்களை முதல் ஐந்து எண்களாலும், அறிவுப் பொறிகள் ஐந்தையும் மனத்தையும் ஆறு என்னும் எண்ணாலும், அகங்காரத்தை ஏழு என்னும் எண்ணாலும், மான் என்பதை எட்டு என்னும் எண்ணாலும் மூலப் பகுதியைத் தொண்டு (ஒன்பது) என்னும் எண்ணாலும் பாடலாசிரியர் குறிப்பிட்டிருப்பதாக, உரை விளக்கம் செய்துள்ளார். இந்த விளக்கத்தை எல்லாரும் ஏற்றுக் கொள்ள வேண்டுமே! ஏற்றுக்கொள்ளினும், பாடலாசிரியரால் விவரம் குறிப்பிடப் படாத இந்த வெற்று எண்ணிக்கை முறைக்கும், ஓரலகு, இரண்டலகு, மூன்றலகு, நான்கலகு என விவரம் குறிப்பிடப்பட்டுள்ள எண்ணிக்கை முறைக்கும் பெரிதும் வேறுபாடு

உண்டு என்பதை உய்த்துணரலாம். மற்றும், தமிழ் இலக்கணத்தில் வேற்றுமைகள் எட்டு எனக் கூறிய ஆசிரியர்கள், பெயர், ஐ, ஒடு (ஆல்), கு, இன், அது, கண், விளி, என்பன அந்த எட்டுமாகும் என விவரம் தந்துள்ளனர். அசைகளின் எண்ணிக்கை விவரம் இது போலவும் இல்லையே! அஃதாவது; அசைகள் நான்கு; முதல் அசை நேர், இரண்டாம் அசை நிரை, மூன்றும் அசை நேர்பு, நான்காம் அசை நிரைபு—என்பதுபோலக் கூறப்பட வில்லையே! இடையிலே 'அலகு' என்பது புகுந்துகொண்டு கலவரம் (கலாட்டா) செய்கிறதே! நேரசை ஓரலகும் நிரை அசை இரண்டலகும் நேர்பு அசை மூன்றலகும் நிரைபு அசை நான்கு அலகும் பெறும் — என்றல்லவா கூறப்பட்டுள்ளது? ஈண்டு, 'அலகு பெறும்' என்னும் தொடரில் பொதிந்துள்ள பொருளைக் கூர்ந்து நோக்கின், அசையின் பெயர்கள், ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு—என்னும் எண்ணிக்கையால் குறிப்பிடப்பட்டுள்ளது என்னும் கொள்கை ஏலாததாகி அடிபட்டுப் போகும்.

எனவே, மேலே, என்னால் தரப்பட்டுள்ள கருத்து விளக்கம் பொருத்தமாகும் என்பது புலப்படலாம். ஆயினும், கூட்டத்தில் இருந்த அறிஞர் ஒருவர், எனது விளக்கத்தில் பாதியை ஏற்றுக்கொண்டார்—மறு பாதியை ஏற்றுக்கொள்ள வில்லை. அஃதாவது :— தொல்காப்பிய உரையாசிரியர்கள், நேர்பு அசையாக உள்ள சொற்களையெல்லாம் மூவகைக்குள்ளும், நிரைபு அசையாக உள்ள சொற்களை யெல்லாம் நால்வகைக் குள்ளும் எண்ணிக்கையிட்டு அடக்கிக் காட்டியிருப்பதால், நேர்பு அசை மூன்றலகும் நிரைபு அசை நான்கலகும் பெறும் செய்தியை மட்டும் அரைமனம்—குறை மனமாகவாவது ஏற்றுக் கொண்டார். ஆனால், உரையாசிரியர்கள் நேர் அசைக்கும் நான்கு எடுத்துக் காட்டுகளும் நிரை அசைக்கும் நான்கு எடுத்துக்காட்டுகளும் தந்திருப்பதால், நேர் அசையும் நால்வகைப்படும்.—நிரை அசையும் நால்வகைப்படும் என்று கூற வேண்டுமாதலால், நேர் அசை ஓரலகும் நிரை அசை ஈரலகும் பெறும் என்று கூறுவது பொருத்தமாகத் தெரியவில்லை—மன நிறைவு அளிக்கவில்லை - என்பதாக, அந்த அறிஞர் கூறினார். இந்த ஐயம் முதலில் எனக்கும் எழுந்தது - மற்றும் யாருக்கும் எழக் கூடியதே!

இந்த ஐய நோக்குடனேயே யான் மேலும் ஆராயத் தொடங்கினேன். அதன் பயனாக, நேர் அசை ஓர் அலகும் நிரை அசை ஈரலகும் பெறும் என்று கொள்வதற்கு உரிய துணை எனக்குக் கிடைத்தது. யான், முதலில், நேர்பு அசை மூன்றலகும் நிரைபு அசை நான்கலகும் பெறும் என்னும் செய்தியையே

எடுத்துக்கொண்டு விளக்கியுள்ளேன்; அதன் பின்னரே, 'தெரிந்ததிலிருந்து தெரியாததற்குச் செல்லுதல்' என்னும் உளவியல் முறைப்படி (Psyehological method), முதலில் தெரிந்து கொண்ட அந்தச் செய்தியின் துணைகொண்டு, தெரியாத தான—நேர் அசை ஓரலகும் நிரை அசை ஈரலகும் பெறும் என்னும் செய்திக்குச் செல்லவேண்டும் என்று தெரிவித்துள்ளேன். இதனை ஆராய்ச்சியாளர்கள் எண்ணிப் பார்க்க வேண்டும்.

நேர் அசை ஓரலகும், நிரைஅசை ஈரலகும் பெறும் என்னும் செய்தியை விளக்க, எனக்குத் தொல்காப்பிய உரையாசிரியர்களும் காக்கை பாடினியாரும் ஓரளவு துணை புரிந்துள்ளனர். அஃதாவது:— நேர் அசையாகிய 'க' என்னும் குறில் ஒரு மாத்திரையும், அதே நேர் அசையாகிய 'கா' என்னும் நெடில் இரண்டு மாத்திரையும் பெற்றாலும், இவற்றின்பின் 'கல்', 'கால்' என ஒற்று வரினும், இந்த க, கல், கா, கால் என்னும் இந்த நான்கினையும் ஒலிக்க ஒரேஒரு ஒலி முயற்சியே தேவைப்படுவதால், நேர்அசைகளாக உள்ளவை அனைத்தும் ஒரே ஒருவகை அலகு பெறும் என்னும் செய்தி உறுதி. இதற்குத் துணை புரியும் நச்சினார்க்கினியரின் உரைப்பகுதி வருமாறு:—

"குறிலும் நெடிலும் தம்முள் மாத்திரை ஒவ்வாவேனும், அவற்றின் மாத்திரையை நோக்காது எழுத்தாம் தன்மை நோக்கி, இரண்டற்கும் ஒரோ ஓரலகு பெறும் என்றார்; இது (நிரை அசைகளாகிய) குறிலிணைக்கும் குறில் நெடிற்கும் ஒக்கும்."—

என்பது, நச்சினார்க்கினியரின் உரைப் பகுதி. 'நேர் அசை ஒரோ ஓரலகு பெறும்' என நச்சினார்க்கினியர் எழுதியுள்ள தொடர், எனது கருத்து விளக்கத்துக்குப் போதுமான துணையாகும். அடுத்து நிரை அசைக்குச் செல்லலாம்:—

நிரை அசையாகிய 'அணி' என்னும் குறிலிணை இரண்டு மாத்திரைகளும், அதே நிரையசையாகிய 'இரு' என்னும் குறில் நெடில் மூன்று மாத்திரைகளும் பெற்று ஒன்றுக்கொன்று வேறுபடுவது போல் தோன்றினும், அலகிடுங்கால் இரண்டும் ஒரே தன்மையன:— இரண்டும் ஒரோ ஓரலகு பெறுவன என்னும் செய்தி, "நேர் அசை ஒரோ ஓரலகு பெறும் என்றார்; இது (நிரை அசைகளாகிய) குறிலிணைக்கும் குறில் நெடிற்கும் ஒக்கும்'—என்னும் நச்சினார்க்கினியரின் உரைப் பகுதியால் அறியப்படும்.

நிரை அசையின் அலகு ஒரோ ஒரு வகையோடு நின்று விடவில்லை. நிரை அசைக்கு 'இணை அசை' என்னும் பெயரும் உண்டு. இதனை, யாப்பருங்கல விரிவுரையில் உள்ள,

"இனி, நேரசை நிரை அசைகளைத் 'தனியசை', 'இணையசை' என்பாரும் உளர். என்னை ?

'தனியசை என்று இணையசை என்று
இரண்டென மொழிமனர் இயல்புணர்ந் தோரே'

என்றார் காக்கைபாடினியார்.

என்னும் பகுதியால் அறியலாம். காக்கை பாடினியாரின் இந்தக் கருத்தைப் பேராசிரியரும் நச்சினார்க்கினியருங்கூட, தத்தம் தொல்காப்பிய உரையில் குறிப்பிட்டுள்ளனர். "அவை இரண்டும் நிரைதலின் இணையசை என்னும் பொருள்பட நிரையசை யென்றாயிற்று"—என்பது பேராசிரியரின் உரைப்பகுதி. "இரண்டெழுத்து நிரைதலின் 'இணையசை' என்னும் பொருள்பட நிரையசை என்றாயிற்று"—என்பது நச்சினார்க்கினியரின் உரைப் பகுதி. உரையாசிரியர் இருவரும் காக்கைபாடினியாரைப் பின் பற்றி இவ்வாறு கூறினர் போலும். ஆக, நிரையசையில் இரு கூறுகள் உள்ளன என்னும் குறிப்பு, இம் மூவரின் படைப் புக்களிலும் உள்ளமை பெறப்படும்.

ஒற்று நீங்கிய நேரசையைக் காட்டிலும், குறில் இணையாகவோ குறில் நெடிலாகவோ உள்ள நிரை அசையில், ஒரு குறிலோ அல்லது ஒரு நெடிலோ கூடுதலாக இருப்பதால், நிரை அசையை இணையசை என்று கூறியிருக்கலாம். இதன்படி, 'அணி' என்னும் நிரை அசையை அ, ணி எனக் கூறுபடுத்துவதோ, 'இரு' என்னும் நிரை அசையை இ, ரு. எனக் கூறுபடுத்துவதோ சரியன்று எனக் கருதுகின்றேன். ஏனெனில், 'குறில் இணையும் குறில் நெடிலும் ஓரோ ஓரலகு பெறும்' என நச்சினார்க்கினியரும் குறிப்புக் காட்டியுள்ளார். எனவே, இவற்றைக் கூறுபடுத்தலாகாது. பதிலாக, அணில் என்பது போலக் குறிலிணை ஒற்றாக உள்ள நிரை அசையையும், 'இருல்' என்பது போலக் குறில் நெடில் ஒற்றாக உள்ள நிரை அசையையும் இரு கூறு படுத்துவதே, 'இணை அசை' என்னும் கொள்கைக்கு மிக்க வன்மை யூட்டும் எனக் கருதுகின்றேன். எனவே, 'அணில்' என்பதை 'அ—ணில்' எனவும், 'இருல்' என்பதை 'இ—ருல்' எனவும் கூறு படுத்துவதே மிகவும் பொருத்தமாய்த் தோன்றுகிறது. 'அணில்' என்பதில், 'ணி' என்னும் எழுத்து 'ல்' என்னும்

ஒற்ருேடு சேர்வதற்காக 'அ' என்னும் எழுத்தை விட்டுச் சிறிது விலகி 'ணில்' எனப் பிரிவினையான ஒலி பெறுவதாகவும், 'இருல்' என்பதில், 'ரு' என்னும் எழுத்து 'ல்' என்னும் ஒற்ருேடு சேர்வதற்காக 'இ' என்னும் எழுத்தை விட்டுச் சிறிது விலகி 'ருல்' எனப் பிரிவினையான ஒலி பெறுவதாகவும் யான் முன்னர்க் கூறியுள்ளதை ஈண்டு மீண்டும் நினைவு கூரவேண்டும். அணி இரு எனவும், அ - ணில், இ - ருல் எனவும் மீண்டும் - மீண்டும் ஒலித்து - ஒலித்துப் பார்க்கின் உண்மை விளங்கும்.

குறிலிணை, குறில்நெடில் ஆகியவற்றினும், குறிலிணை ஒற்றும் குறினெடில் ஒற்றும் வேறுபடுவதை 'நிரைபு' அசையில் வைத்துப் பார்க்கினும் புலனாகும். 'உண - வு', 'உ - ணர் - வு' என்றும், 'மலா - டு', 'ம - லாட் - டு' எனவும் மீண்டும் மீண்டும் ஒலித்துப் பார்க்கின் உண்மை புலப்படாமற் போகாது.

எனவே, குறிலிணையும் குறினெடிலும் ஒரு வகையான ஒலி முயற்சியும், குறிலிணை ஒற்றும் குறினெடில் ஒற்றும் வேருெரு வகையான ஒலி முயற்சியும் பெறுவதால், நிரை அசை இருவகை அலகு பெறும் என்னும் செய்தி தெளிவாகலாம்.

(தொடரும்)

---

## அன்பு

'அன்பு' என்னுஞ் சொல்லுக்கு அன்று என்பது சொற்பொருள்; தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தமக்கல்ல, தக்கார்க்கு வேளாண்மை செய்தற் பொருட்டே என்பது கருத்து, 'அன்பு' என்ருலும் 'தியாகம்' என்ருலும் கருத்தில் ஒன்றே. 'அன்பிலார் தாம் எல்லாம் தமக்குரியர்; அன்புடையாரென்ருல் என்பும் பிறர்க்குரியார்' என்று அன்புக்குக் கூறும் திருவள்ளுவர் விளக்கத்தை இங்கு நினைவிற் பதித்தல் வேண்டும். அதனுலேதான், 'இருந்து ஓம்பி இல்வாழ்வதெல்லாம் விருந்து ஓம்பி வேளாண்மை செய்தற் பொருட்டே' யாயிற்று. அவ்வளவுக்கு உயிரின் இயல்பாகிய அன்பு உயிர்களிடத்தில் நிறைவாக ஓங்குதல் வேண்டும். அப்படி ஓங்கினுல் அருளுடைமைக்கு அது தாயாகும்.

—தவத்திரு அழகரடிகள்

(திருக்குறள் அறம், பக். ௯௯)

# இலக்கிய உடன் பிறப்பினர்*

[தவத்திரு அழகரடிகள்

திருக்குறள் பீடம், மாம்பாக்கம், குருதுலம்]

ஆசிரியர் மறைமலையடிகள், திரு. கா. சு. பிள்ளையவர்கள் முதலிய பெருமக்கள் கருத்தோடும் ஆதரவோடும் இதனை (கழகத்தை)த் தோற்று வித்தவர் இதன் செயலாளராய் இருந்து விளங்கிய திரு. வ. திருவரங்கம் பிள்ளை யவர்கள். சைவமும் தமிழும் மேன்மேலும் சிறப்பதற்கு அவர்கள் உண்மை அடிப்படையாய்த் திகழ்ந்தார்கள்.

அவர்கள் மறைவுக்குப் பின்னும் முன்னும் தொடக்கத்திலிருந்தே இந்த அமைப்பின் பல துறையான தொண்டுகளுக்கும், வளர்ச்சிக்கும் விழிப்பு எழுச்சி புரட்சி ஆட்சிகளுக்குங் காரணமாகத் திறமையான பெருமைப்புகள் புரிந்து திகழ்பவர் திரு. வ. சு. அவர்கள். அருமைத் தமையனார் தொடுத்த தொண்டைத் தமது பிறவிப்பணியாகவே எடுத்து விளங்கச் செய்யும் இவரைப் போன்றவரல்லரோ இலக்கிய உடன் பிறப்பினர்!

தமிழகத்தில் நூற்பதிப்புத்துறையால் ஒரு பொதுநிலைக்கழகம் அமைப்பதென்பதும், அதனைத் தமிழகத்துக்கு ஆக்கமாய்த் தமிழ்க் கொள்கைகளில் வளர்ப்பதென்பதும், அதுவும் ஐம்பது ஆண்டுகளுக்கு முன் இருந்த இந்த நாட்டின் விழிப்பற்ற நிலையில் உருவாக்குவதென் பதும் அருமையிலும் அருமை: அதனை நடத்திக் காட்டிய விறல் வீரரே திரு. வ. சு. அவர்கள்.

ஒரு முயற்சி எடுத்தால் அது முடியும் வரையில் ஒரே உறுதியில் நின்று செயல் புரிவது இவர் இயல்பு. யார் யார் துணையினால் அது நிறைவேறும் என்பதை நுனித்தறிவதில் சிறந்த வல்லமையாளர்; உற்று நோக்கிப் பிறர் இதயத்தை ஊடுருவி உணர்வதிலும் அவரவர் இயல் பறிந்து இயங்குகின்ற பண்பிலும் இயற்கையாகவே ஆற்றல் மிக்கவர்: அதனால் அலுவலகப் பணியாளர்களையும் கல்வி கேள்விகள் நிறைந்த பேரறிஞர்களையும் தம்மிடம் ஈர்த்து இணைக்கிக்கொண்டு கழகத் தொண்டுகளை நிறைவேற்றுவது இவர்க்கு எளிதிற் கூடிவருகிறது.

காலநிலையும், நாட்டுத்தேவையும் வழிபயக்கும் ஊதியமும் கூர்ந்தறிந்து தொழில் நடத்தும் திறமையாலும், ஒன்றிய உழைப்பாலும் போட்டிகளைக் கடந்து வீறும் விறலாலும் பல வெற்றிகள் கண்டவர் இவர்; தொழிற் பயிற்சி நிலையங்களிலும் அயல்நாட்டுப் பயிற்சி நுட்பங்களிலும் பயிலாமலே இவ்வாறு அமைந்திருக்கும் தொழில் வீறு, இவர்க்குக் கருவில் திரு என்றே கூறவேண்டும். பதிக்கும்முறை யறிந்து நூல்களைப் பதிப்பிப்பதோடு அவைகளை விலைப்படுத்திப்

---

*ஆட்சியாளர் வ. சு. அவர்களின் பவள விழாவின்போது விழா மலரில் எழுதிய கருத்துரை.

பரவவைக்கும் வியத்தகு செயல் வல்லமைகளும் பல: கழக வளர்ச்சிக்கும், நாட்டு முன்னேற்றத்துக்கும், கொள்கை நிறைவேற்றங்களுக்கும் அவை பேருதவியாய் இருக்கின்றன. ஆசிரியர் மறைமலையடிகளாரிடத்தில் யாம் கல்வி பயிலச் சென்ற ஆண்டு 1920. அந்த ஆண்டிலேயே சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் தொடங்கப்பெற்றது. ஏழு ஆண்டுகள் கழித்து எமக்கு ஓரளவு புலமை வாய்த்த பின்பு, அடிகளார் கருத்தின் படி கழகப்பணிகளில் தொடர்புகொள்ள நேர்ந்தது. அப்போது எமக்கு அகவை இருபத்துமூன்று. அதுமுதல் திரு வ. சு. அவர்களின் இயல்புகளும், கழகத்தின் நிலைகளும் பழகியறியும் வாய்ப்புக் கிடைத்தது.

தமிழகமும் தமிழ் வழங்கும் ஏனைநாடுகளும் பெருமையுறும், கழகம் என்றால் வ. சு., வ. சு. என்றால் கழகம்; இப்பெருமை அவ்வளவு காரண காரியமாய் இருத்தலால், கழகத்தையும் வ. சு. அவர்களையும் இணைந்து யாம் பாராட்டுகின்றோம். எல்லாம்வல்ல செம்பொருட்சிவம் மேன்மேற் சிறப்புகளுக்கு அருள்புரிவதாக.

———

## நக்கீரர் கழகத்தில் இரங்கல் கூட்டம்

“திருக்குறள் பணியைத் தம் வாழ்க்கைப் பணியாய் ஏற்று, வள்ளுவத்தினைத் தமிழ்நாடெங்கும் பரவச் செய்தவரும், சைவ நெறியாகிய தமிழ்நெறியைத் தழைத்தோங்கச் செய்தவரும், 1944-ல் திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரி வகுப்புகளைத் தொடங்கி வைத்தவரும், பம்பாய், கல்கத்தா ஆகிய இடங்களில் 1957-58 ஆம் ஆண்டுகளில் தமிழ் மணம் கமழச் செய்தவரும் ஆகிய அழகரடிகள் மறைவுற்றதை எண்ணி இக்கூட்டம் வருந்துவதோடு, அவர்களது இன்னுயிர் அமைதியுற வேண்டுகிறது.

———

## “திருக்குறள் பீடம்” நிறைவேற்றிய இரங்கல் தீர்மானம்

“திருக்குறள் பணியைத் தம் வாழ்க்கைப் பணியாய் ஏற்று, வள்ளுவத்தினைத் தமிழ் நாடெங்கும் பரவச் செய்தவரும், சைவ நெறியாகிய தமிழ் நெறியைத் தழைத்தோங்கச் செய்தவரும், தாம் பிறந்த மாம்பாக்கத்தில் “குருகுலம்” ஒன்று கண்டு, ஆண், பெண் உயர் பள்ளிகள், மாணவர் இல்லம் கண்டவரும், “திருக்குறள் பீடம்” என்ற சிறந்த அமைப்பினைத் தோற்றுவித்தவரும், பல நூல்களுக்குச் சிறந்த ஆராய்ச்சி முன்னுரை, அடிக்குறிப்பு, அருஞ்சொற்பொருள் விளக்கங்கள் தந்தவரும், தமிழகத்தில் திருக்குறள், திருமந்திரம், திருக்கோவையார் போன்ற நூல்களுக்கு விளக்கச் சொற்பொழிவுகள் நிகழ்த்தியவரும், 1944-ல் “திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரி” வகுப்புகளைத் தொடங்கி வைத்தவரும், பம்பாய், கல்கத்தா ஆகிய இடங்களில் 1957-58 ஆம் ஆண்டுகளில் தமிழ் மணம் கமழச் செய்தவரும் ஆகிய அழகரடிகள் 18—2—81 இல் சிவப்பேறு பெற்றனர். அவர்களின் பிரிவை எண்ணி இக்கூட்டம் வருந்துகிறது. அவர்களது ஆருயிர் திருவருளிற் கலந்து இன்புறுக என வேண்டுகிறது.

# அடிகளார்க்கு அஞ்சலி

[குருகுலக் கவிஞர் சி. து. கன்னிசாமி]

1. குருபழனி ஆதீன குருவாகிக் குறட்பீடத் (து)
அரசாய்ச் செங்கோல்
திருபலியச் செந்தமிழும் சிவநெறியும் உலகிசையத்
தாங்கு சீர்த்தி
அருபைவளர் அழகரடிகேள்! இன்று சிவ வடிவம்
ஆர்ந்த ஞானப்
பெருநிலையை விரும்பியெமைப் பிரிந்திட்டீர் அடியேம்பால்
பிழைகள் உண்டோ!

2. பிறந்துமொழி பயின்றிட்ட நாண்முதலாய்ப் பிஞ்ஞகன்றாள்
பேணும் பொற்பால்
சிறந்த மறை மலையடிகள் சேவடிக்கண் மெய்யன்பு
திகழ அன்னார்
மறைந்தபினும் அவர்மாட்சி பலபடியும் நிலைநிறுத்த
வல்லீர்! நெஞ்சம்
நிறைந்திடுதம் ஆசிரியர் புகழ்நும்போல் உலகிலெவர்
நிறுத்தினரே!

3. 'வந்தனையோ எம் அருமை மாணவநீ!' என்றுருகி
மகிழ்ச்சி பொங்க
வந்துமறை மலையடிகள் மார்பிறுகத் தழுவியுமை
வரவேற் றாரோ!
செந்தமிழும் சிவநெறியும் தேவரெலாம் கேட்டுருகிச்
செழிக்கின் றாரோ!
அந்தவிடம் குருகுலம்போல் அமைவுடைத்தோ அடியேங்கட் (கு)
உரைத்தி ரன்றால்!

4. நெல்லைநகர்த் தமிழ்ச்சைவ சித்தாந்தக் கழகமென
நிலவும் சென்னை
நல்லநிறு வனக்கழகப் புலவரெனத் தமிழ்மரபு
நாட்டில் வாழச்
சொல்லரிய நூல்பலவும் சொற்றபெருந் திறத்தாலே
கழகத் தொன்மை
நல்லொளியை ஞாயிறென நாட்டினமை நும்புகழை
நவிலு மன்றே!

5. சிவஞான போதம்உயர் சித்திநெடு மந்திரநூல்
செஞ்சொற் கோவை
தவமாட்சித் திருத்தொண்டர் புராணமெலாம் தமிழ்ச்சுவையும்
தரமும் கோத்து
நவமான சென்னைநகர்ச் சிவனடியார் திருக்கூட்டம்
நன்மை மேவத்
தவஞான அழகரடிகேள்! அந்நாள் விரித்துரைகள்
சாற்றி னீரால்

6. கண்ணுதலான் காதல்செயும் கழுக்குன்றில் மனமொழிமெய்
கலந்த அன்பால்
எண்ணியுகப் புகழ்மொழிந்தும் பணி புரிந்தும் எந்நாளும்
இசையும் பொற்பால்

அண்ணல்எம தடிகாள் ! நீர் குருகுலமும் எம்முளமும்
அலர்வ தேபோல்
தண்ணமரு மறைமலையும் தங்கியொளி வடிவமெனத்
தழைக்கின் றீரோ !

7. கருணைபொழி திருமுகமும் கனிந்தழகு தவழ்மொழியும்
கனிவிற் காட்டும்
அருள்நயந்த அமுதமொழி ஆற்றலினல் அவனியெலாம்
அணைக்கும் சால்பும்
பொருள்நலங்கூர் பண்டார சாத்திரத்து மெய்ப்பொருளால்
புன்மை போக்கும்
தெருள்மலியு நல்லருளும் சிந்தனையில் வேரூன்றிச்
செழிப்ப வாமால்.

8. நடுநாடு தொண்டர் நா டுயர்பாண்டி வளநாடு
சோழ நாடு
முடிவில்லா மேற்கொங்கும் மூர்த்திதலம் தீர்த்தமவை
முறையா நால்வர்
அடிச்சுவட்டில் அடிகாள் ! நீர் ஆற்றியநல் வழிபாட்டின்
அருமை யெல்லாம்
படிப்பினையாய் உலகவர்க்குப் பயன்பட்டுச் சிவநெறியைப்
பரப்பு மன்றே !

9. சிவநெறியைப் பரப்புதலின் திருஞான சம்பந்தர்
சிவத்தொண் டாலே
பவநெறியைப் பாற்றுதலின் அப்பர்திருத் தொண்டர்தமைப்
பரவும் பொற்பால்
உவமையிலா வன்றொண்டர் உணர்வெல்லாம் சிவமயமாய்
ஓங்கு தெய்வத்
தவநெறியால் மணிமொழியார் தம்பெருமை படைத்துலகில்
தழைத்தீர் அண்ணல் !

10. எத்துணையார் நும்அருமைச் சொற்பொழிவால் இன்புற்றார்
இனிய சைவத்
தத்துவநூல் தமிழ்நெஞ்சம் பறிகொடுத்தார் எத்துணையர்
சங்க நூல்கள்
முற்றுசுவைக் கனிச்சாற்று நூற்கடலில் மூழ்கினர்தாம்
எனையர் முற்றும்
இத்துணையென் றறியேமால் இருங்கடலின் மணலெண்ணி
இசைப்பா ருண்டோ !

11. திருக்குறளின் செயல்முறைகள் திருமடத்தில் ஓங்கிடவும்
திகழும் கொள்கைப்
பெருக்கமெலாம் ஊர்கள்தொறும் கிளைகளிலே பெருகிடவும்
பேணிச் செய்கை
உருக்கமுடன் வளர்த்ததமிழ் ஓங்கல்நும தருங்கருத்தை
ஓர்ந்து நாளும்
விருப்பமுடன் செயல்மலர எம்முளத்தில் மெய்யுணர்வாய்
விளங்கு வீரே !

———

## இளவழகனர் (அழகரடிகள்) மறைவுக்கு இரங்கல் :

### ஒழுக்கத்தால் உயர்ந்த சீலர்

என் பேரன்பர் அழகரடிகள் இறைவன் திருவடி நீழலை அடைந்தமை அறிந்து பெரிதும் வருந்துகிறேன். அழகரடிகள் தமிழுக்குச் செய்த தொண்டுகள் பெரிதும் பாராட்டத்தக்கவை. அவர்தம் ஒழுக்கம் விழுப்பமுடையது என்பதை நான் அறிவேன். பிரிவெனும் துயர் நம்மைப் பெரிதும் வருத்துகின்றது. "இறந்தன பிறக்கும் பிறந்தன இறக்கும்" என்னும் முதுமொழி நம்மை வியக்கச் செய்கிறது. எனவே அவர் மீண்டும் பிறப்பின், நம் தமிழ் நாட்டிலேயே பிறந்து, விட்ட குறையைத் தொட்டு முடிக்க, இறைவன் திருவருளை வேண்டுகிறேன்.

—முதுபெரும் புலவர்
மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை, சென்னை

### தமிழ் வாழத் தாம் வாழ்ந்தார்

மறைமலை யடிகள் பெற்ற
மாண்புறு சீட ராகும்
அறைபொருள் எவையா னாலும்
ஆராய்ந்து பார்த்து நல்ல
தறைதொறும் தமிழே வாழத்
தாயநற் பணிகள் ஆற்றி
இறைபடி படைந்த எங்கள்
அழகரின் இணைத்தாள் வாழ்க!

—தே. முருகசாமி, காரைக்குடி

### அவலம்! அவலம்!!

தமிழ்மொழியைப் பிறப்பித்த தாயாய்ச் சொன்ன
தகவில்லாப் பொய்யுரையைத் தகர்த்து வீழ்த்தி
அமிழ்த்திவைத்த மெய்மைகளை ஆய்ந்து நோக்கி
அறிவித்த மறை மலையார் அறிவில் தோய்ந்து
இமிழ்கடல்சூழ் உலகத்தில் இணையில் லாத
எழிற்குறளின் பீடத்தில் இலங்கித் தோன்றி
அமிழ்தான பணிகளினை ஆற்றி வந்த
அழகரினை இழந்திங்கே அவல முற்றோம்.

—புலவர் பொன் முனியப்பன், கூவனூர்.

## பலர் ஒருங்கு திரண்டுவந்த படிவம் போல்வார்

அன்பினிற் சிறந்த நல்லார்!
அமைதிநல் வடிவம் போல்வார்!
நன்றுயர் பண்பின் மிக்கார்!
நற்றமிழ்ச் சைவத் தோன்றல்!
மன்பெருஞ் சீர்மாம் பாக்கம்
குருகுலம் கண்ட மாண்பார்!
இன்புயர் ஞானச் செல்வர்!
இளவழ கனுராம் சான்ருேர்!

தெள்ளுசைவ சித்தாந்தச் செஞ்ஞாயிறு'
எனத் திகழ்வோர்! சீர்மாம் பாக்கம்
பள்ளியொடு தம்வாழ்வின் பணியாகக்
குருகுலமும் பண்பிற் கண்டோர்!
கொள்ளுமுயர் நாவன்மை குலவுசிவ
நெறிச்செஞ்சொற் கொண்டல்! பொன்போல்
தள்ளரிய புகழ்பூத்த சங்கநூற்
பெரும்புலவர்! தகைமை சான்ருேர்!

கலைபயின்ற தெளிவுடையார்! கட்டுரைநல்
வன்மைமிக்கார்! கலைஞர் ஏறு!
குலன்அருளே முதலாய குணம்நிறைந்தோர்!
மிகஉயர்ந்த குறிக்கோ ளாளர்!
புலமைஇதழ் நூல்உரைநற் போதகா
சிரியர்எனப் புகறல் ஒன்ருே?
நலம்அமையும் பற்பலர்தம் நன்ஞானு
சிரியருமாம், நலத்தர் ஆவார்!

கலைநலத்தால் சம்பந்தர்! கனிந்தஅன்பால்
மணிமொழியார்! கருதும் தொண்டின்
நிலைநலத்தால் நாவரசர்! உலகியலிற்
சுந்தரனுர்! நெஞ்சில் வீண்பற்று
இலநலத்தால் பட்டினத்தார்! எழிற்பொதுமை
பரப்புதலால் இராம லிங்கர்!
பலநலத்தர் இவர், சான்ருேர் பலர்ஒருங்கு
திரண்டுவந்த படிவம் போல்வார்!

—ந. ரா. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.,
ஆசிரியர்: திருக்கோயில்

## தமிழ் வடிவம் மறைந்தது

இளவழக னுரென்ன ஈங்குலவி வந்த
அளவில் தமிழ்வடிவம் ஒன்றைக் — களவில்
நமனுங்கொண் டேகினுன் நாடலற அந்தோ
தமரங்காள் செய்வதென்னே நாம்.

—மயிலம், ஆ. சிவலிங்கனுர்.

## 'எந்தைசிவன் அழைத்தனரோ?......'

1. நந்திமலர் போல்நீற்றை மெய்மணக்கப் பூசியசீர்
 அழகன் ; கண்கள்
சிந்தியுளம் நெக்குருகிச் செவியினிக்கப் பாடியவாய்
 அழகன் உன்னை
எந்தைசிவன் உடனிருத்திச் சித்தாந்தச் செம்பொருளைக்
 கேட்க ஆசை
முந்தியதால் அழைத்தனனோ? மறைமலையார் அழைத்தனரோ?
 சென்றாய் அந்தோ !

2. குருகுலமாம் குன்றத்தில் குளிர்தமிழாம் கதிராகி
 ஒளிர்ந்தாய் ; தெய்வம்
தருசமய அமுதமொழி வானாகித் தமிழ்க்கடலை
 முகந்தாய் ; நெஞ்சாம்
உருகுபயிர் விளைதொண்டை உலகத்தார் கைகூப்பச்
 செய்தாய் ; எந்தப்
பெருவெளியில் கலந்தனை ? யான் தேடித்தான் பார்க்கின்றேன்
 அழகர் கோவே !

—புலவர். அடியன் மணிவாசகன், திருவைகுந்தம்.

## ஆன்றவிந் தடங்கிய சான்றோர்

திரு. தி. சு. பாலசுந்தரனாரைத் தனித்தமிழ் இயக்கம் இளவழகனாராக மாற்றியது. சமயப் பற்று அவரைத் துறவு கோலம் பூணச் செய்து அழகரடிகளாக ஆக்கியது. அவர்தம் சமயச் சொற்பொழிவுகள் அவருடைய அயராத தொண்டினைப் பிறர்க்கு எடுத்துக்காட்டி விளக்கம் பெறச் செய்தன. அவர் நடத்தி வந்த 'முல்லைக் கொடி' எனும் இதழ் அவரது எழுத்தாற்றலைப் புலப்படுத்திய சாதனையாகும். அவருடைய 'மறைமலையடிகளார் வரலாற்று மாட்சி' எனும் தொடர் கட்டுரை அவருக்கும் அடிகளார்க்கும் இருந்த நெருக்க உணர்வைக் காட்டும்! ஆன்றவிந்து அடங்கிய சான்றாண்மை மிக்க அவரை என்போன்றார் என்றும் மறக்க இயலாது.

—மா. சு. சம்பந்தன்
எழுத்தாளரும் பதிப்பாளரும்.

## சீர்மை வாழ்க !

'பொதுமறை' என்னும் ஏட்டைப்
    புகழ்பெற நடத்தி நின்ற
பொதுமறைப் புலவன்; தூய
    பொன்மனச் செம்மல்; இன்று,
'எதுமறை' என்று காணு
    திருப்பார்க்கும் உணர்வை யூட்டி,
'இதுமறை' என்று காட்டும்
    எழிலுடைத் துறவுச் செல்வன்!

குருகுலம் அமைத்துக் காத்த
    குரிசிலாம்; மாம்பாக்கத்து
வருகுலம் அன்பினாலே
    வருகுலம் என்றமைத்தான்;
உருகுலம் உடையான்; எந்தம்
    உளமெலாம் புகுந்தான்; என்றும்
பெருகுள வாய்மை யாளன்,
    பிரானடி சேர்ந்தான் மாதோ!

'அழகராம் அடிகள்' என்றே
    அனைவரும் போற்ற நின்ருன்;
பழகிடு தமிழிற் பன்னூல்
    பரிந்தினி தளித்த நல்லான்;
பழந்தமிழ்ப் பண்பு மேவிப்
    பாரெலாம் செழிக்கத் தொண்டு
பழகினன் புவியை விட்டுப்
    படர்ந்தனன்; சீர்மை வாழ்க!

—செஞ்சோற்கோண்டல், தமிழாகரர்
முனைவர். சோ. சிங்காரவேலன், எம். ஏ., பி. எச். டி.

## அடிகளார்க்கு நாம் செய்யும் போற்றுதல்கள்

அருட்டிரு அழகரடிகள் - தமிழ்த்திருவுருவம்; புலனழுக்கற்ற அந்தணாளர்; நுண்மாண் நுழைபுலம் மிக்கவர்: சொற்பொருள் விரித்துரைக்கும் வித்தகர்; திருக்குறளுக்கு எழுத்திலும் வாழ்க்கையிலும் செயலிலும் விளக்கம் கண்டு வரலாற்றினைப் படைத்த பேராளர்; திருக்குறள் பீடம் கண்டு அதன் குருமுதல்வராய் விளங்கிய மெய்யுணர்வாளர், தவமும் சிலமும் இரக்கமும் தொண்டும் கலந்த ஒருவராய் நம்மிடையே வாழ்ந்த தமிழ்க்கடல் வற்றிவிட்டது! செந்தமிழும் சிவநெறியும் அறவுணர்வும் நிலவும் வரையில் அருட்டிரு அழகரடிகள் புகழும் நிலவும்.

அழகரடிகள் வழியில் திருக்குறள் நெறியில் தமிழினத்தை—மனித குலத்தை ஒன்றுபடுத்தி வாழ்விப்பதே அழகரடிகளுக்கு நாம் செய்யும் போற்றுதல்கள்!

—தவத்திரு குன்றக்குடி அடிகளார்

## எந்த நாள் காண்போம்

எண்டிசையும் ஏத்தும் இளவழக னரென்னும்
தண்டமிழ்த் தாயின் தவப்புதல்வ!—அண்டரிறை
கந்தனடி சேர்ந்தாய் கருணைபொழி நின்முகத்தை
எந்தநாள் காண்போம் இனி.

—திருமுருக கிருபானந்தவாரியார்.

## மங்காப் புகழ்பெற்ற சான்றோர்

அருட்டிரு. அழகரடிகள் மறைமலையடிகளின் மாண்புறு மாணவராகத் திகழ்ந்து, சைவத் தமிழ் வளர்த்து, அடிகளைப் போலவே துறவு மேற்கொண்டு, மாம்பாக்கம் குருகுலம் திருக்குறட் பீடத் தலைவராக விளங்கி, கல்விப்பணி புரிந்து மங்காப் புகழ்பெற்ற சான்றோர் ஆவர்.

—வை. குஞ்சிதபாதம் பிள்ளை.

## திண்ணியர்

18—11—1923இல் முதன் முறையாக அடிகளார் பல்லாவரம் போந்து அடிகள் மாணவராயினர். அப்போதவர் அகவை 19. எனக்கு 16. அவர் பள்ளியாசிரியராயிருந்த போது ஓரிரு திங்கள் பல்லாவரம் வந்து உறவினர் வீட்டில் தங்கி அடிகளிடம் 10 ஆண்டுகள் இலக்கண இலக்கியங்களைப் பாடங் கேட்டார். நானும் அவரும் ஒன்றாக உரையாடியும் உலாவியும் மகிழ்வோம். அவர் காலத்தை வீணாக்கார். சுருக்கமாக அன்பாகப் பேசுவார். அமைதி—பொறுமை அவரது தோற்றம். உள்ளமோ, கல்வி—ஆய்வு—கடவுட் பற்றில் வான்போன்றது. குருபத்தியில் மணிவாசகரைப் போன்றவர். குருகுலம் அமைத்ததில் எண்ணிய எண்ணியாங்கு நிறைவேற்றிவிட்ட திண்ணியரானார்.

—பேராசிரியர் மறை திருநாவுக்கரசு.

———

---

## கட்டுரையாளர்கட்கு ஒரு வேண்டுகோள்

தாள் விலை ஏற்றத்தின் காரணமாகவும், இன்றியமையாத சில கட்டுரைகட்கு மட்டும் இடந்தந்து, வேறு பல புதிய கருத்துரைகட்கும் இடந்தர வேண்டியிருப்பதாலும் மிக நீண்ட தொடர் கட்டுரைகட்கு இடமின்மையாலும் அன்பர்கள் அருள்கூர்ந்து தொடர் கட்டுரைகளைத் தவிர்த்து 6 பக்கங்கட்கு மேற்படாத அளவில் எழுதி அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

—ஆசிரியர்.

---

# பாவாணர் மறைவுக்கு இரங்கல்: (தொடர்ச்சி)

## தமிழ்க்கென வாழ்ந்த தகைமையாளர்

உலகத் தமிழ் மாநாட்டில் அவர் பேசிய பேச்சு இன்னமும் என் காதில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. தமிழ் மொழிக்காகவே பிறந்து, வளர்ந்து, வாழ்ந்து, தமிழ்த் தொண்டு செய்துகொண்டே மறைந்தவர் பாவாணர். என் செய்வது? அவருடைய தொண்டுகளை, ஆய்வுகளைத் தமிழக அரசு வெளியிடுவதும், மக்கள் அவற்றைப் பின்பற்றி யொழுகு வதுமே இப்போது அவருக்கு நாம் செய்யும் வணக்கமும், பாராட்டு மாகும்.

—முத்தமிழ்க் காவலர்,

மூனைவர் கி. ஆ. பெ. விசுவநாதம், திருச்சி.

## தொடர்ந்து பணியாற்றுவோம்

மொழிஞாயிறு மறைந்துவிட்டது. தமிழியக்கத்தின் ஒளிமிக்க ஞாயிறு மறைந்துவிட்டது. பாவாணர் தமிழ் மறவர்; கொள்கை மறவர்; தறுகணாளர்; இனிய பண்பாளர்; நுண்மாண் நுழைபுலம் மிக்கவர். அந்த அரும்பெறலறிஞரை இழந்து தமிழ்த்தாய் தவிக்கிருள். ஆற்ருெணுத்துயரம் அழுத்துகிறது. என்னசெய்வது? அவர்தம் இன்னுயிர் அமைதி பெறுவதாக. பாவாணர் விட்டுச்சென்ற பணியைத் தொடர்வது நமது கடமை.

தவத்திரு குன்றக்குடி அடிகளார்.

## இத்துயர் ஆற்ருெணுதது!

தனித்தமிழ் வளர்ச்சிக்காகப் பெரிதும் உழைத்த பா. வே. மாணிக்க நாயக்கர், மறைமலை அடிகளார் போன்ற தமிழ்ப் பேரறிஞர்களுக்கு ஒப்பாகத் திகழ்ந்தார் பாவாணர் அவர்கள். இத்தகைய தமிழ்ப் பெரு மகனுரின் இழப்பு உண்மையில் ஈடுசெய்ய இயலாப் பேரிழப்பாகும். அவர்தம் இழப்பு நம் கண்ணீரைப் பெருக்கெடுக்கச் செய்கிறது. இத் துயரம் ஆற்ருெணுதது.

—பேராசிரியர் தா. ஏ. ஞானமூர்த்தி, கோவை.

## அவர்தம் ஆய்வுகள் ஒளிகாட்டும்

தன்னலமின்றித் தனித்தமிழ்நலம் பேணிய அத் தண்டமிழ்க் கொண்டலின் மறைவு இத்தமிழ்க் குமுகாயத்தால் ஈடுசெய்ய வியலாத வொன்றும். அன்னுருடைய அரும்பெரும் ஆய்வுகள் பின்னுள்ள பிறங் கடையினர்க்குக் கலங்கரை விளக்கமாய் ஒளிகாட்டுதல் ஒருதலை.

—பெரு. தமிழ்வேந்தன், பவானிசாகர்.

## தமிழ் அவர் உயிர்

பேராசிரியர் ஞா தேவநேயப் பாவாணர் தெளிவான நிறைந்த அறிவு ததும்பிய பெரியார். அஞ்சா நெஞ்சமும் துணிவும் அவர் கண்கள். தமிழ் அவர் உயிர். தமிழின் தொன்மையையும் தூய்மையையும் எடுத்துக்காட்டித் தமக்கென ஒரு நடையையும் முறையையும் வகுத்துக்கொண்டு பெரும் தமிழ்ப் படைக்கு வழிகாட்டிய தலைவராவர். அவருடன் நெருங்கிப் பழகியவன் என்ற முறையில் அவர் எளிய தன்மையையும் மிடுக்கான பார்வையையும் மறக்க முடியாதவனு யுள்ளேன். தமிழ் உள்ள அளவும் அவர் பணியின் சிறப்பு நிற்கும்.

—பேராசிரியர் கா. மீனுட்சிசுந்தரம்,
கலைக்கல்லூரி, கோவை.

## தேவர்க்கு நேசனுகச் சென்றிட்டாய்!

ஆய்வறிஞர் பலபேர்கள் அவனியிலே இருந்தாலும்
அறுதியிட் டுறுதியாகத்
தோய்வின்றி யொருபாலும் சான்ருேடு துணிந்துரைக்கும்
நின்னைப்போற் சொல்வாருண்டோ
காய்விலாக் குணச்செம்மால் பாவாண! சமநிலைதான்
காலத்திற் கொவ்வா தொன்ருே
மாய்வுதரும் கொடுங்கூற்றம் நினைக்கொடுபோய் மாளாத
வன்பழியைத் தேடிற்றந்தோ!

தமிழ்த்தாயின் தனித்தன்மை தமிழர்களின் தனிமரபு
தாழாதே தழைக்கச் செய்த
அமிழ்தனைய தமிழினிலே ஆய்வுரைகள் பலகண்ட
பேரறிஞ! அண்ணல் அண்ணல்
தமிழ்நிலத்தே நீண்ட தமிழாக்கம் தமிழன்பர்
இன்ருன்று எவரே காண்பர்
தமிழ்த்தாயின் தனிப்புதல்வ தமிழர்களின் தனித்துணைவ
எமைவிட்டுத் தணந்திட் டாயே.

தேவநேயர் என்ருெருபேர் சேர்ந்தமையால் செந்தமிழ்சேர்
வளமான மண்ணை விட்டுத்
தேவர்க்கு நேசனுகச் சென்றிட்டாய்! ஆனாலும்
செந்தமிழ்தான் அங்க ணுண்டோ
எவருமே நின்பிரிவால் இன்றமிழின் எழுச்சிக்கால்
இன்றளவில் அற்ற தென்றே
ஆவலிப்பார் ஆதலினுல் அதிவிரைவில் தமிழ்மண்ணை
மறவாமல் அடைவாய் ஐயா.

—மகாவித்துவான் ச. தண்டபாணிதேசிகர், மதுரை.

## ஓவாக் கவலையுற்றோம்

அகர முதலாம் அருஞ்சொற் பிறப்பைப்
பகர்தேவ நேயப்பா வாணர்—அகர
முதலியுரு வாக்கும் முயற்சியைவிட் டந்தோ
முதல்வ னடியடைந்தார் முன்.

முன்னு தமிழ்ப்பணியை முற்ற முடியாது
துன்னு பிணியின் தொடர்பினால்—என்னே
பாவாணர் நம்மைப் பிரிந்தார் படருழந்தோம்
ஓவாக் கவலை யுழந்து.

—பேராசிரியர் க. வெள்ளைவாரணன்,
காமராசர் பல்கலைக்கழகம், மதுரை.

## விழியூற்றை விதிர்த்தெறிய வழியின்றி விம்முகின்றோம்

மொழியூற்றோர் சுனையூற்றும்; 'மொகுமொ'கென
மடைதிறந்து முழங்கி ஊறிப்
பொழிவூற்றும் பாவாணர்ப் பெருவூற்றை,
பைந்தமிழ்ச்சீர் அன்னாய் பொல்லாப்
பழியேற்றும் மொழிக்கயவர் பகைதகர்த்த
பெருமகனை இழந்தோம் அம்மா!
விழியூற்றும் கண்ணீரை விதிர்த்தெறிய
வழியின்றி விம்மு கின்றோம்.

— 'கவிஞர்கோ'' கோவை இளஞ்சேரன், நாகை.
செயலாளர், தமிழகப் புலவர் குழு.

## தக்கார் இனி, யார் தமிழ்க்கு?

தொன்மைத் தமிழறிந்து, தூய்மை யுறத்துலக்கி,
'இன்மையதில் இல்லை'யென எய்துவிக்கும்—ஒண்மையும்
மிக்கார் மறைந்தார்: மிகுபுலமைக் காவல்தரத்
தக்கார் இனி. யார் தமிழ்க்கு?

—தமிழ்க்கனல், வேலூர்.

## தேவநேயப் பாவாணர் புகழ்

இனித்துல குவக்கும் தனித்தமிழ்த் தொண்டே
மனிதப் பிறவியின் மாதவ மானோன்
செந்தமிழ்ச் செல்வியின் சீரிய நண்பன்
சிந்தனைச் சிற்பி திருக்குறள் நேயன்
அயர்வறு முயற்சியால் அகர முதலியை
வியனுறக் கோத்த விறல்கொள் புலவோன்

திட்ப நுட்பச் சிறப்புறு கட்டுரை
ஒட்பமோ டுதவினன் ஒப்புயர் வில்லான்
தமிழே உலகத் தாய்மொழி யாக,
தமிழில் உலகம் தனிமகிழ் வெய்தப்
பேசினுன் எழுதினுன் பேணினுன் பெரியான்
மாசிலா நடையான் வானகம் சென்ருன்!
உலகத் தமிழ்நாட் டுயர்சிறப் பெல்லாம்
நிலம்புகழ் செந்தமிழ் நலமெலாம் வானோர்
உணர்ந்திட உணர்த்தவே உயரச் சென்ருன்
மணந்திகழ் செந்தமிழ் வான்சிறப் பெய்தவே
தேவ நேயப் பாவாணன் தமிழ்க்
காவலன்; காலனும் கவர வொண்ணுதான்
ஆவி யெல்லாம் அருந்தமி ழானேன்
பூவுல கெல்லாம் புகழ்ந்திடத் திகழ்வான்

மீன் வில் புலிக்கொடி
வெற்றி கொண் டாட
வான் புவி வழுத்த
வாழிய புகழே!

—கவியோகி சுத்தானந்த பாரதியார்.

## பாவாணர் பாவானுரே!

மாநாட்டின் சிறப்பையெலாம் தனித்தமிழில்
மறைக்காமல் எடுத்தரைக்க அவரை யின்றி
வானுட்டில் வாழ்வோர்க்கு ஆளில் லாமல்
வாவென்ற காரணத்தால் போய்விட் டாரோ?
மேனுட்டில் மாநாடு நடத்த வேண்டி
மன்னுதமிழ்த் தூதாகச் சென்றிட் டாரோ?
தானுட்டித் தன்கொள்கை நிறுவும் நேயர்
தமிழின்றித் தனியாகச் சென்றிட் டாரோ?

பாவாணர் மாயப் பரவும் மொழியிருளைப்
பாவாணர் யார்வந்து போக்கிடுவார்—தேவான
பாவாணர் இன்றிப் பரவும் இருள்போக்கார்
பாவாணர் பாவானு ரே!

—தே. முருகசாமி, காரைக்குடி.

## அமைதியான பண்பாளர்

கழகப் புலவராயிருந்து, பல நூல்களைப் பதிப்பித்தவரும், சைவசித்தாந்தத்தைப் பரப்பி வந்தவரும், நாட்டு மக்களுக்குக் கல்வியைப் பரப்பப் பள்ளியை நடத்திவந்தவரும், அமைதியான பண்பு மிக்கவருமாகிய அருட்டிரு இளவழகனர் மறைவு சைவத்துக்கும் தமிழுக்கும் பேரிழப்பாகும்.

—பேராசிரியர் அ. கி. பரந்தாமனர்.

## தமிழுக்கு இனி யார் துணை !

கற்றுத் துறைபோகிக் கல்வி வரம்பாகி
கற்றோர் தலைமைகொள நின்றோய்நின்-பெற்றியினை
வற்றாக் கடலுரைக்கும் வானுரைக்கும் மண்ணுரைக்கும்
மற்றார் உளரே இணை.

வாழ்ந்ததுவும் செந்தமிழ்க்கே வண்ணதமிழ்க் கூடலிலே
சூழ்ந்ததமிழ் மாநாட்டில் சொக்க உரையாற்றி
வீழ்ந்ததுவும் செந்தமிழ்க்கே வீரத் திருவுருவாம்
ஏந்தலுனை ஏத்தாதார் யார்.

வடவா ரியப்பகையும் இந்திப் பகையும்
திடமாக நின்றெதிர்த்தாய் ஆக்கம் பலவும்
சமைக்கும் அறிவினாய் சாய்த்தாய் தலையை
தமிழுக் கினியார் துணை.

உலகத் தமிழ்க்கழக அன்பரெலாம் தேம்ப
இலகுதமிழ்ச் சான்றோர்கள் மாழ்க--பலகற்றோய்
நீடு துயிலேற்றாய் வாடுகிறாள் செந்தமிழ்த்தாய்
ஈடிலா உன்னை இழந்து.

கூடு துறந்தாலும் கொள்கை துறவாதோய்
பீடுபெறச் செந்தமிழ் ஞாயிறே ஆயினாய்
ஆக்கினாய் சொற்பிறப்பில் சீர்த்த படைப்புகள்
தேக்கினாய் தேயாப் புகழ்.

—பேராசிரியர் இரா. மதிவாணன்.

---

ஆசிரியருக்குக் கடிதம் :

## தமிழ் நெடுங்கணக்கு: அரிச்சுவடி அல்லது அரிவரி

மார்கழிச் செல்வி இதழில் தமிழ் நெடுங்கணக்கு அரிச்சுவடியா? அகரச்சுவடியா? என்ற கேள்வியை நண்பரொருவர் எழுப்பி அது அகரச் சுவடியே யென்றும் அரி எனப்படும் திருமாலுக்கும் தமிழ் நெடுங் கணக்கிற்கும் தொடர்பேதும் இருக்க இயலாதென்றும் கூறியிருந்தார்.

இது குறித்து, அண்மையில் காலஞ்சென்ற ஞா. தேவநேயப் பாவாணர் தம் சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் (சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1956) என்ற நூலில், 'தமிழ் நெடுங்கணக்கிற்கு 'அரிவரி' என்ற பெயரிருப்பது, அது இடைக் காலத்தில் 'அரி ஓம்' என்று சொல்லித் தொடங்கப் பெற்றதை அறிவிக்கும் என்று குறிப் பிடுவதை ஈண்டுச் சுட்ட விழைகின்றேன். மொழி வழக்கும் மொழிக்கு இலக்கணம் என்பதும் வெவ்வேறு துறைகள் என்பதும் நாமறிந்தது. இலக்கணக் கூறுகளாகிய சாரியையும் பிறவும் மொழி வழக்கினின்று உய்த்துணரப்படும் உண்மைகளேயன்றி அக் கூறுகளுக்காக மொழி அமைவதாகாது.

—நிர்மல் கு. ஆ. செல்வமணி

# கழக நூலாசிரியர், நுண்கலைச் செல்வர் அ. இராகவன் மறைவு

தமிழர் கலைகள், பண்பாடு, வரலாறு போன்ற துறைகளில் தனித்தன்மையுடன் ஆய்ந்து வந்த கழக நூலாசிரியர் பேரறிஞர், நுண்கலைச் செல்வர் சாத்தன்குளம் அ. இராகவன் அவர்கள் 8—3—1981 ஞாயிறன்று மதுரை—காமராசர் பல்கலைக் கழகத்தில் சொற்பொழி வாற்றி முடித்து உட்கார்ந்த நிலையில் இயற்கை யெய்தினர்கள் என்ற செய்தியறிந்து வருந்துகிறோம்.

தமிழர் கலைகளின் சிறப்பை உலகெங்கும் எடுத்துப் பரப்ப வேண்டுமென்ற ஆர்வத்துடன் கட்டுரைகள், நூல்கள் எழுதியும் சொற்பொழிவுகள் ஆற்றியும் பெருந்தொண்டாற்றியவர் அவர். தமிழரின் தொன்மைச் சிறப்பை நிலைநாட்ட வேண்டுமென்று பல்வேறு வரலாற்றுச் சிறப்புமிக்க இடங்கட்கு நேரில் சென்றும் பல்வகையான ஆய்வு நூல்களைப் படித்தும் புதுப்புதுக் கருத்துக்களை எடுத்துரைத்தவர் அவர். சைவக் குடும்பத்தில் பிறந்து கோயிலுக்குள் செல்லக்கூடாது என்ற நாத்திக வழியில் நின்று, பின் கோயிற் கலைகளின் சிறப்பை எடுத்துக்கூறக் கோயில்களையே ஆய்வுப் பொருளாக எடுத்துக்கொண்டு அவற்றோடு தம் வாழ்வைப் பிணைத்துக் கொண்ட பேரறிஞர் அவர்.

திருநெல்வேலி மாவட்டத்தில் சாத்தன் குளத்தில் 22—4—1902இல் தோன்றியவர் இராகவன். இளமையில் தந்தை பெரியாரின் இயக்கத்தில் பேரீடுபாடுகொண்டு அவர்தம் வலக்கரமாகத் தொடக்க காலத்தில் திகழ்ந்தார். பேரறிஞர் அண்ணா அவர்கள் தந்தை பெரியாரைச் சாருமுன் இவர் பெரியாரவர்கட்கு உடனுறை தோழராக, தொண்டராக ஈரோட்டிலேயே வாழ்ந்தார். பெரியார் அவர்களின் பகுத்தறிவுக் கொள்கைகளை விளக்கும் வகையில் குடியரசு, விடுதலை போன்ற ஏடுகளில் பகுத்தறிவுக் கட்டுரைகளை எழுதினர். தமிழர் தலைவருடன் பல்வேறு கூட்டங்களில் சொற்பொழிவாற்றி வந்தார்.

பின்னர் கொழும்பு மாநகர் சென்று சொந்தமாக அச்சுக்கூடம் அமைத்தார். அவ்வமயம் தமிழ்க் கலைகளின்மீது ஈடுபாடு ஏற்பட்டது. அது தொடர்பாக அறிஞர் பலருடன் பழகினர். பல அரிய நூல்களை வாங்கிச் சேர்க்கத் தொடங்கினர். இன்று அவரிடம் சிறந்த, கிடைத்தற்கரிய நூல்கள் கொண்ட ஒரு நூலகம் உள்ளது. தம் வாழ்க்கையையே கலைவாழ்க்கையாக அவர் மாற்றிக்கொண்டார். அவர் தம் வீட்டையே கண்ணைக் கவரும் கலைக்கூடமாக அமைத்தார்.

அவருடைய ஆர்வம் பல அரிய கலைப் பொருள்களைச் சேர்ப்பதிலும் சென்றது. தமிழ்க் கலைகளின் சிறப்பை விளக்கும் படங்கள் தொகுத்தல், தமிழ்நாட்டுக் காசுகளைத் தொகுத்து வைத்தல், பல்வேறு இசைக் கருவிகள், திருவிளக்குகள் போன்றவற்றின் ஓவியங்களைத் தேடித் தொகுத்தல் போன்ற பணிகளில் தம் எண்ணத்தைச் செலுத்தி அரிய பொருள்களைத் தொகுத்து வைத்துள்ளார்.

சிங்கப்பூரிலிருந்து வெளிவரும் 'தமிழ் முரசு' நாளிதழில் 'தமிழ்நாட்டுக் கப்பற் கலை' 'தமிழ்நாட்டுக் காசுகள்' போன்ற தொடர் கட்டுரைகளை எழுதிப் பேரும் புகழும் பெற்றார். 'தமிழ் நாட்டுத் திருவிளக்குகள்' 'தமிழர் பண்பாட்டில் தாமரை' போன்ற அரிய நூல்களை எழுதினார்.

அவர்தம் அரிய ஆற்றலை யுணர்ந்த கழக ஆட்சியாளர் செந்தமிழ்ச் செல்வர் வ. சுப்பையா பிள்ளை அவர்கள் அவர்க்கு நெல்லைச் சிவஞானமுனிவர் நூல் நிலையத்தின் புதிய கட்டிடத் திறப்பு விழாவில் 'நுண்கலைச் செல்வர்' என்ற பட்டத்தை வழங்கினார்கள்.

அவர் எழுதிய 'தமிழக சாவகக் கலைத் தொடர்புகள்' எனும் நூலைக் கழகவழி வெளியிட்டார். மிக அண்மையில் இராகவன் அவர்களின் 'ஆதித்தநல்லூரும் பொருநைவெளி நாகரிகமும்' என்ற அரிய ஆய்வு நூல் கழகவழி வெளிவந்துள்ளது.

தமிழக வரலாற்றில் இராகவன் தோய்ந்து விளங்கினார். 'கோநகர் கொற்கை' என்ற அவர்தம் நூல் பாண்டியனின் பழைய தலைநகரான மறைந்து நிற்கும் கொற்கைச் சிற்றூரின் பெருமையை எடுத்துரைப்பதாகும்.

தமிழக வரலாற்றை எழுதத் தமிழக அரசு அமைத்துள்ள வரலாற்றுக் குழுவில் அவர் ஓர் உறுப்பினராக உள்ளார்.

முதல் இரண்டு உலகத் தமிழ் மாநாடுகளிலும் கலந்து கொண்டு ஆய்வுக் கட்டுரைகள் படித்துள்ளார். பாளையங் கோட்டையிலேயே வரலாற்றுக் குழு ஒன்று அமைத்து அவ்வப்போது ஆய்வுக் கூட்டங்களை நடத்தி வந்தார்.

இன்னும் பல நூல்களை வெளியிடத் திட்டமிட்டிருந்த நிலையில் அவர் திடுமென மறைந்தது தமிழர்க்குப் பேரிழப்பாகும். அவரைப் பிரிந்து வாடும் அவர்தம் குடும்பத்தார்க்கும் நண்பர்கட்கும் எம் ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

———

# செய்திகளும் குறிப்புக்களும்

## இசைப் பேரறிஞர், மீ. ப. சோமு அவர்கட்குப் பாராட்டு

இலக்கியச் செல்வரும், அனைத்திந்திய வானொலி நிலையத்தின் தென்பகுதித் தலைமைத் தயாரிப்பாளருமான திரு. மீ. ப. சோமசுந்தரம் (சோமு) அவர்கட்குச் சென்னைத் தமிழிசைச் சங்கம் "இசைப் பேரறிஞர்" பட்டமளித்துச் சிறப்பித்ததை முன்னிட்டு 21—2—81 அன்று மாலை, சென்னை மைய நூலகக் கட்டிடச் சொற்பொழிவுக் கூடத்தில் மாண்புமிகு அமைச்சர் இராம. வீரப்பன் அவர்கள் தலைமையில் ஒரு சிறப்புக் கூட்டம் நடைபெற்றது. இராசா சர். முத்தைய செட்டியார், கி. சந்திரசேகரன், டாக்டர் என். தேவநாதன். கல்கி இராசேந்திரன், நடுவர் மகராசன் ஆகியோர் பாராட்டுரை வழங்கினர்.

## உலகத் தமிழ்க் கழகம், பெங்களூர்

மதுரையில் நடைபெற்ற ஐந்தாவது உலகத்தமிழ் மாநாட்டினை யொட்டி பெங்களூர் தமிழ்ச்சங்கத் தலைவர் திரு. கே. சுப்பிரமணியம் அவர்களை அமைப்பாளராகக் கொண்டு ஒரு குழு அமைக்கப்பட்டுள்ளது. இக் குழுவில் டாக்டர் ந. பிச்சமுத்து. கே. முருகேசன், ந. மு. ஏசுதாஸ், பி. மதனன், சென்னை சுப்பிரமணியம் ஆகியோர் இடம் பெற்றுள் ளனர். இக் குழு அரசியல் சார்பின்றித் தமிழ்மொழி, பண்பாடு இவற்றை வளர்க்க மட்டுமே பணியாற்றும் என்று கூறப்படுகிறது.

## நெய்வேலி உலகத் தமிழ்க் கழக முத்தமிழ் விழா

நெய்வேலி உலகத் தமிழ்க் கழகத்தின் சார்பில் 14—2—81 அன்று, நெய்வேலி பொறியாளர் கழக அரங்கில் மருத்துவர் திரு. க. சவுந்திரபாண்டியன் அறு. மு (M. S) அவர்கள் தலைமையில் திருவள்ளுவர் நாள் விழா, பொங்கல் விழா, பாவாணர் பிறந்த நாள் விழா ஆகிய முத்தமிழ் விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. திருமிகு கோ. கண்ணன் வரவேற்புரை நிகழ்த்தினர். பன்மொழிப் புலவர் பேராசிரியர் இரா. மதிவாணன் க. மு. அவர்கள் சிறப்புரை யாற்றினர். இவ் விழாவினை யொட்டி நினைவுக் கலையேந்தல் பெ. இராமையனுரின் பத்து நினைவாற்றல் நிகழ்ச்சியும் (தசாவதானம்) நடை பெற்றது. திருவாட்டி கமலா சவுந்திரபாண்டியன் திருக்குறள் போட்டிப் பரிசுகளை வழங்கினர். இரா. தமிழன்பன், க. தாமரைச் செல்வன் ஆகியோர் உரையாற்றினர்.

## தேவார ஓதுவா மூர்த்திகள் சங்கம்

இச் சங்கத்தின் சார்பில் 62 ஆவது மாதாந்தர வழிபாடும், நால்வர் படத்திறப்பும், அன்பர் பயண வழியனுப்பு விழாவும்

29—2—81 அன்று மாலை சைதை காரணீசுவரர் கோயிலில் நடைபெற்றது. அறங்காவலர் T. பால சுந்தர முதலியார் தலைமையில் K. M. முத்துலிங்க ரெட்டியார், ந. ரா. முருகவேள், A. T. A. ஈசுவர முதலியார் ஆகியோர் ஆசியுரை கூற 1—3—81 அன்று தேவாரம் நடராசன் தலைமையில் 50 அன்பர்கள் புறப்பட்டு 27 திருத்தலங்களை வழிபட்டு 5—3—81 இல் திரும்பினர்.

## இரங்கல் கூட்டங்கள் :

3—4—81 இல் ஒய். எம். சி. ஏ. பட்டி மன்றத்தின் சார்பில் மறைந்த அழகரடிகட்குப் போற்றுதல் கூட்டம் நடைபெற்றது. திரு. சிறுவை நச்சினார்க்கினியன் அழகரடிகளின் வரலாற்றினை விளக்கமாக எடுத்துரைத்தார். தமிழன்பர்கள் பலர் உரையாற்றினர்.

கோயமுத்தூர் வடகோவை, கல்வி அகத்தில் 1—2—81 இல் கூடிய 'சிந்தனைப் பேரவை'க் கூட்டத்தில் தேவநேயப் பாவாணர் மறைவுக்கு இரங்கல் தெரிவிக்கப்பட்டது.

சித்தூர் மாவட்டத்தைச் சேர்ந்த புதுப்பேட்டை-நகரி ஊராட்சி மன்ற ஒன்றியத் துவக்கப் பள்ளி மாணவர் இலக்கிய மன்றத்தின் சார்பில் 31—1—81 இல் தேவநேயப் பாவாணர் மறைவுக்கு இரங்கல் தெரிவிக்கப்பட்டது.

## திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரி தீர்மானங்கள்

சென்னைத் திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரியின் சார்பில் 3—2—81 இல் நடைபெற்ற கூட்டத்தில் சென்னை மாவட்ட மைய நூலகத்தின் பெயரினைத் 'தேவநேயப் பாவாணர் நூலகம்' எனப் பெயர் மாற்றம் செய்தமைக்குத் தமிழக அரசினைப் பாராட்டி நன்றிதெரிவிக்கும் தீர்மானம் ஒன்று நிறைவேற்றப்பட்டது.

அடுத்துத் திருவள்ளுவர் ஆண்டினைத் தமிழக அரசு செயல்முறைப் படுத்துவது பற்றிய தீர்மானம் ஒன்றும் நிறைவேற்றப்பட்டது.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

### (செல்வி சிலம்பு, ௫௫-உஅசுஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. | வ. சுப்பையா பிள்ளை அவர்கள் கழக ஆட்சியாளர் | ரூ. 10—00 |
| ,, | ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | 5—00 |
| ,, | A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை | 5—00 |
| ,, | V. இராமச்சந்திரன் பிள்ளை, திருவானைக்கோயில் | 75—00 |
| ,, | Dr. G. விசுவநாதபிள்ளை, திருவரங்கம் | 25—00 |
| ,, | Dr. மா. நன்னன் [தந்தையார் நினைவுநாள் அன்பளிப்பு | 25—00 |

— — —

# மதிப்புரை

## முத்தமிழ் காத்த முத்தழகி (நாடக நாட்டியக் காவியம்)

[ஆசிரியர்: கலைமாமணி, கவிஞர் கோ. புத்தனேரி, இரா. சுப்பிரமணியம், தமிழ்க் குடில் வெளியீடு, 14 செனடாஃப் முதல் தெரு, சென்னை-600018, விலை: ரூ. 2-50]

இது ஒரு வரலாற்றுக் குறுநாவலும், அதே நேரத்தில் நாட்டிய நாடகமாக நடித்தற்கு ஏற்ற நாடகக் காவியமுமாகும். வேள்விக்குடி செப்பேட்டில் குறிக்கப்படுகின்ற பாண்டியன் நெடுஞ்சடையன், கொற்கைவேந்தன் நரசிங்கன் ஆகியோரைப் பின்னணியாகக் கொண்டு புனைடப்பட்ட குறுநாவலாகும். மதுரையில் நடைபெற்ற ஐந்தாவது உலகத் தமிழ் பாராட்டில் அரங்கேற்றுதற்காக எழுதப்பட்டது இந்நாடகம்.

இந்நாடகம் சிறியதேயாயினும் கதைப்போக்கு விறுவிறுப்பாகவும், தமிழ்ப் பெண் ஒருத்தியின் வீரச் செயல்களையும், பண்டைத் தமிழ் நாட்டின் சிறப்பினையும் விளக்குவதாகவும் அமைந்துள்ளது. கவிஞரின் பாடல்கள் சுவைமிக்கனவாகக் காணப்படுகின்றன. இந்நாடகத்தைப் படிப்போர் ஏட்டில் இதனைக் கண்டு மகிழ்வதைக் காட்டிலும் அரங்கில் நாடகமாகக் கண்டுகளிக்கவே விரும்புவர். அதிலும் நாட்டிய நாடகமாகக் காணல் மிக்க இன்பம் பயப்பதாகும்.

## சந்தத்தில் சந்திப்பேன்

[ஆசிரியர்: கவிஞர் இ. சு முத்துசாமி, பாரி நிலையம், 184 பிராட்வே, சென்னை-600001, விலை: ரூ. 4-00]

இது கவிஞர் முத்துசாமி அவர்கள் அவ்வப்போது தீட்டிய கவிதைகளின் தொகுப்பு. கவிதை, சமுதாயம், இயற்கை, சான்றோர், ஆங்கிலக் கவியாக்கம் என்னும் நான்கு பகுதிகளைக் கொண்டது. நமது சமுதாயத்தில் காணப்படும் சீர்கேடுகளைச் சந்தத்தின் துணைகொண்டு சாடுகிறார் இவ்வாசிரியர். இயற்கையின் வியத்தகு நிலைகளை விரித்துரைக்கிறார்; அண்ணல் காந்தியடிகள், இந்திராகாந்தி, காமராசர், பெரியார், பாரதிதாசன், சுரதா, மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை, டாக்டர் மெ. சுந்தரம், அரசு, நாராயணசாமி நாயுடு, பேரா. வெள்ளையன், இ. மு. சுப்பிரமணியபிள்ளை ஆகியோரைப் பற்றி அவ்வப்போது இவர் பாடிய பாடல்கள் 'சான்றோர்' பகுதியில் இடம்பெறுகின்றன. இவர் பாடல்களின் ஆங்கில ஆக்கமும் இதில் இடம்பெற்றுள்ளது. படித்துச் சுவைக்கவேண்டிய நல்ல கவிதைத் தொகுப்பு.

## ஒப்புமை ஒளியில் வள்ளுவம்

[ஆசிரியர்: டாக்டர் கு. மோகனராசு, (B.Sc., M.A., Ph.D, D. Anth., D. Geog, D.H. Ed., Cert. - Skt.) வள்ளுவர் கழக வெளியீடு. கிடைக்குமிடம், சை. சி. நூற்பதிப்புக் கழகம், சென்னை-1. விலை: ரூ 4-00]

சீன நாட்டுப் பேரறிஞர் கன்பூசியசின் கருத்துக்களோடு வள்ளுவரின் கருத்துக்களை ஒப்பிட்டுக் காட்டி, பல ஆராய்ச்சிக் கருத்துக்களை இந்நூலில் வெளியிட்டுள்ளார் ஆசிரியர். அத்துடன் தொல்காப்பியத்தில் சில ஐயங்களை எழுப்பி அவற்றுக்கு விடைகாண முயலும் ஆசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கது. நூல் அளவில் சிறியதே யாயினும் கருத்தில் அரியது. ஆராய்ச்சியாளர்கட்குப் பயன்படத்தக்க அரிய நூல்.

---

தென்னிந்தியத் தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.

'செந்தமிழ்ச் செல்வி' பற்றிய உரிமை விளக்கம்-1956 ஆம் ஆண்டுச் சட்டம் - விதி 8 - படிவம் 4 இல் கண்டுள்ளபடி
ஏப்ரல்—ஆகஃச்டு

---

1. வெளியிடும் இடம் : 79, பிரகாசம்சாலை, (பிராட்வே) சென்னை-1

2. வெளியீட்டு முறை : திங்களிதழ்

3. அச்சிடுவோர் பெயர் : அப்பர் அச்சகம்

இனம் : இந்தியர்

முகவரி : 80, பிரகாசம்சாலை, சென்னை-1

4. வெளியீட்டாளர் பெயர் : திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிட்டெட்,

இனம் : இந்தியர்

முகவரி : 79, பிரகாசம்சாலை, சென்னை-1

5. ஆசிரியர் பெயர் : திரு. வ. சுப்பையாபிள்ளை

இனம் : இந்தியர்

முகவரி : 79, பிரகாசம்சாலை, சென்னை-1

6. இதழ் உரிமையாளர்கள், மூலதனத்தில் நூற்றுக்கு ஒரு விழுக்காட்டிற்கு மேற்பட்ட பங்குடைய பங்காளிகள் ஆகியோரின் பெயர்களும் முகவரிகளும் :

1 திரு. T. S. இராமலிங்கம் பிள்ளை, M. A., B. L.
ஓய்வு பெற்ற சட்டத்துறைச் செயலாளர்,
பி. 11, ஏ. செக்டர் மகாநகர், லக்னோ.

2. திரு. வ. சுப்பையா பிள்ளை
91, பவழக்காரத் தெரு, சென்னை-1.

3. திருமதி சு. மங்கையர்க்கரசி
91, பவழக்காரத் தெரு, சென்னை-1.

4. திரு. R. M. K. S. கோபாலகிருஷ்ண பிள்ளை
வணிகர், சாத்தான்குளம்,
(திருநெல்வேலி மாவட்டம்)

5. திரு M. K. சிவகாமிநாத பிள்ளை
C/o R. M. K. V. சன்ஸ்,
வடக்குரதவீதி, திருநெல்வேலி-6.

6. திரு. N. S. சுந்தரம், பார்-அட்-லா,
134, தெற்கு இராச வீதி, தூத்துக்குடி.

7 திரு. மு காசிவிசுவநாதன் செட்டியார்
வங்கியார், பாகனேரி, (இராமநாதபுரம் மாவட்டம்)

8 திருமதி கா. லட்சுமி ஆச்சி
(திரு. காசிவிசுவநாதன் செட்டியார் மனைவி)
பாகனேரி.

9. திரு. பெரி. அழ. மு. நா. நாராயணன் செட்டியார்
உரிமையாளர், பாரி அச்சகம், 66, பிரகாசம் சாலை, சென்னை-1

10. திரு. மு. ஆறுமுகம்
15. பெருமாள் வடக்கு மாடத்தெரு,
பாளையங்கோட்டை, திருநெல்வேலி-2.

11. திருமதி க. வடிவழகி
(திரு. இரா. கலியாணசுந்தரம் மனைவி)
2, மேட்டுத் தெரு, சென்னை-1.

12. திருமதி. மு. வயிரமணி
(திரு. இரா. முத்துக்குமாரசாமி மனைவி)
2, மேட்டுத் தெரு, சென்னை-1.

13. திருமதி பழ. மீனாட்சி ஆச்சி
(திரு. S. M. பழனியப்ப செட்டியார் மனைவி)
11, ரட்லண்ட் கேட், 2-வது தெரு,
சென்னை-6.

14. திரு. S. Ct. சிதம்பரம் செட்டியார்
162, அவினாசிசாலை, கோயமுத்தூர்-1.

15. திரு. A. Kn. அருணாசலம்
(திரு. கண்ணப்பசெட்டியார்புதல்வர்)நாயனார்குளத்தெரு
நாட்டரசன் கோட்டை, (இராமநாதபுரம் மாவட்டம்)

16. திருமதி T. S. J. தனலட்சுமி அம்மையார்
(திரு. T. S. ஜம்புலிங்கம் செட்டியார் மனைவி)
திருப்பூர் இல்லம், கோயமுத்தூர்.

17. திரு. Rm. K. Rm. இராமசாமி செட்டியார், வங்கியார்,
திட்டை, (தஞ்சை மாவட்டம்)

18. திரு. இரா. கலியாணசுந்தரம், பி. எஸ்ஸி.
2, மேட்டுத்தெரு, சென்னை-1.

19. திரு. இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்
2, மேட்டுத்தெரு, சென்னை-1.

மேலே தரப்பட்டுள்ள விளக்கங்கள் அனைத்தும் என்னுடைய முழு நம்பிக்கைக்கும் அறிவுக்கும் ஏற்ப உண்மையானவை என வ. சுப்பையா பிள்ளையாகிய யான் உறுதியளிக்கிறேன்.

10—3—1981 (ஒப்பம்) வ. சுப்பையா பிள்ளை
பதிப்பாளர்

'செந்தமிழ்ச் செல்வி' பற்றிய உரிமை விளக்கம்–1956 ஆம் ஆண்டுச் சட்டம் - விதி 8 - படிவம் 4 இல் கண்டுள்ளபடி
செப்டம்பர்—மார்ச்சு

---

1. வெளியிடும் இடம் : 261, இலிங்கிச்செட்டித் தெரு, சென்னை 1
2. வெளியீட்டு முறை : திங்களிதழ்
3. அச்சிடுவோர் பெயர் : அப்பர் அச்சகம்
   இனம் : இந்தியர்
   முகவரி : 80, பிரகாசம்சாலை, சென்னை-1
4. வெளியீட்டாளர் பெயர் : தென்னிந்திய தமிழ் சங்கம்
   இனம் : இந்தியர்
   முகவரி : 80, பிரகாசம்சாலை, சென்னை-1
5. ஆசிரியர் பெயர் : திரு. இரா. முத்துக்குமாரசாமி
   இனம் : இந்தியர்
   முகவரி : 80, பிரகாசம்சாலை, சென்னை-1
6. இதழ் உரிமையாளர்கள், மூலதனத்தில் நூற்றுக்கு ஒரு விழுக்காட்டிற்கு மேற்பட்ட பங்குடைய பங்காளிகள் ஆகியோரின் பெயர்களும் முகவரிகளும் :

1. திரு. T. S. இராமலிங்கம் பிள்ளை, M. A., B. L.
   ஓய்வு பெற்ற சட்டத்துறைச் செயலாளர்,
   பி. 11, ஏ. செக்டர் மகாநகர், லக்னோ.
2. திரு. வ. சுப்பையா பிள்ளை
   91, பவழக்காரத் தெரு, சென்னை-1.
3. திருமதி சு. மங்கையர்க்கரசி
   91, பவழக்காரத் தெரு, சென்னை-1.
4. திரு. R. M. K. S. கோபாலகிருஷ்ண பிள்ளை
   வணிகர், சாத்தான்குளம்,
   (திருநெல்வேலி மாவட்டம்)
5. திரு M. K. சிவகாமிநாத பிள்ளை
   C/o R. M. K. V. சன்ஸ்,
   வடக்குரதவீதி, திருநெல்வேலி-6.
6. திரு. N. S. சுந்தரம், பார்-அட்-லா,
   134, தெற்கு இராச வீதி, தூத்துக்குடி.
7. திரு மு காசிவிசுவநாதன் செட்டியார்
   வங்கியார், பாகனேரி, (இராமநாதபுரம் மாவட்டம்)

8 திருமதி கா. லட்சுமி ஆச்சி
(திரு. காசிவிசுவநாதன் செட்டியார் மனைவி)
பாகனேரி.

9. திரு. பெரி. அழ. மு. நா. நாராயணன் செட்டியார்
உரிமையாளர், பாரி அச்சகம், 66, பிரகாசம் சாலை, சென்னை-1

10. திரு. மு. ஆறுமுகம்
15. பெருமாள் வடக்கு மாடத்தெரு,
பாளையங்கோட்டை, திருநெல்வேலி-2.

11. திருமதி க. வடிவழகி
(திரு. இரா. கலியாணசுந்தரம் மனைவி)
2, மேட்டுத் தெரு, சென்னை-1.

12. திருமதி. மு. வயிரமணி
(திரு. இரா. முத்துக்குமாரசாமி மனைவி)
2, மேட்டுத் தெரு, சென்னை-1.

13. திருமதி பழ. மீனாட்சி ஆச்சி
(திரு. S. M. பழனியப்ப செட்டியார் மனைவி)
11, ரட்லண்ட் கேட், 2-வது தெரு,
சென்னை-6.

14. திரு. S. Ct. சிதம்பரம் செட்டியார்
162, அவினாசிசாலை, கோயமுத்தூர்-1.

15. திரு. A. Kn அருணாசலம்
(திரு. கண்ணப்பசெட்டியார்புதல்வர்) நாயனார்குளத்தெரு
நாட்டரசன் கோட்டை, (இராமநாதபுரம் மாவட்டம்)

16 திருமதி T. S. J. தனலட்சுமி அம்மையார்
(திரு. T. S. ஜம்புலிங்கம் செட்டியார் மனைவி)
திருப்பூர் இல்லம், கோயமுத்தூர்.

17. திரு. Rm. K. Rm. இராமசாமி செட்டியார், வங்கியார்,
திட்டை, (தஞ்சை மாவட்டம்)

18. திரு. இரா. கலியாணசுந்தரம், பி. எஸ்ஸி.
2, மேட்டுத்தெரு, சென்னை-1.

19. திரு. இரா, முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்
2, மேட்டுத்தெரு, சென்னை-1.

மேலே தரப்பட்டுள்ள விளக்கங்கள் அனைத்தும் என்னுடைய முழு நம்பிக்கைக்கும் அறிவுக்கும் ஏற்ப உண்மையானவை என இரா. முத்துக் குமாரசாமியாகிய யான் உறுதியளிக்கிறேன்.

10—3—1961 (ஒப்பம்) இரா. முத்துக்குமாரசாமி
பதிப்பாளர்

## கழக நிலையங்களில் கிடைக்கும்

# பிற பதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

| | |
|---|---|
| அறிவியல் கட்டுரைகள்—டாக்டர் கே. நடராசன் | 9 00 |
| வாழ்க்கை இலக்கியம்——மது. ச. விமலானந்தம் | 3 00 |
| தமிழ்ப் பேதை—டாக்டர். ஆறு அழகப்பன் | 20 00 |
| தாலாட்டுக்கள் ஐநூறு ,, | 12 00 |
| அகமும் புறமும்—அரங்க சீனிவாசன் | 7 50 |
| சங்க இலக்கியத்தில் காதல் கதை —எஸ். அருணையப்பன் | 10 00 |
| இரும்பு முள்வேலி—பேரறிஞர் அண்ணா | 5 90 |
| மொழியும் அதன் வாழ்வும்—நிர்மலா சுரேஷ் | 20 00 |
| திருக்கீழ்வேளூர் உலா—இரா. நாகசாமி | 4 50 |
| ஜோதிடக்களஞ்சியம் IV—ஏ. எம். பிள்ளை | 5 00 |
| காப்பியக் கருத்தோட்டங்கள்—முத்துராசன் | 17 00 |
| மொழியியல் கலைச்சொல் அகராதி—சக்திவேல் | 5 00 |
| தமிழே எல்லாம்—கரு. நாகராசன் | 12 00 |
| எழுத்தும் அச்சும்—மா சு. சம்பந்தன் | 5 00 |
| சாரணீயம்—து. இராமலிங்கம் | 4 00 |
| ஊருக்கு நல்லது—நெ. து. சுந்தரவடிவேலு | 7 50 |
| கவிதைகளின் கனவுகள்—ந. முருகேசன், எம்.ஏ. | 4 00 |
| முக்தானந்த ஞானக் குறவஞ்சி—இரா. நாகசாமி | 4 50 |
| திருவேங்கடநாதன் வண்டுவிடுதூது ,, | 4 50 |
| கொடுமணல் இலக்கியங்கள் ,, | 7 75 |
| சுந்தரமூர்த்தி கோவை ,, | 6 00 |
| பிரபந்தத் திரட்டு—அன்னி தாமசு | 16 00 |
| தமிழக நாட்டுப்புறக் கலைகள்—ஏ. என். பெருமாள் | 10 00 |
| முத்தமிழ்காத்த முத்தழகி (நாடக நாட்டியம்) —கவிஞர். புத்தனேரி. இரா. சுப்பிரமணியம் | 2 50 |
| முப்பாலில் முச்சீர்மணிகள்—டாக்டர். கு. மோகனராசு | 2 50 |
| தமிழ்யாப்பு ,, | 7 00 |
| குறள்தரும் ஆத்திசூடி ,, | 2 50 |
| New Light on the Early History of Tamil Nadu —V. T. Chellam | 10 00 |
| Abithana Chinthamani (அபிதான சிந்தாமணி) —A. Singaravelu Mudaliar | 200 00 |
| Winslow's Comprehensive Tamil and English Dictionary | 200 00 |
| Winslow's English—Tamil Dictionary | 200 00 |

பதிவு எண் M 4899.

# கழகப் புதிய வெளியீடுகள்

## ஆதித்தநல்லூரும் பொருநைவெளி நாகரிகமும்

ஆசிரியர் : நுண்கலைச் செல்வர்., அ. இராகவன்

மொகஞ்சதாரோ-அரப்பா அகழ்வாராய்ச்சிகட்கு ஒப்ப வைத்து எண்ணத்தக்கது தமிழ்நாட்டிலுள்ள ஆதித்த நல்லூர் அகழ்வாராய்ச்சியாகும். வரலாற்றுசிரியர்கட்குப் பெரிதும் பயன்படக்கூடியது. விளக்கப்படங்களுடன் கூடிய அழகிய பதிப்பு. ரூ. 12 00

## தமிழக-சாவகக் கலைத் தொடர்புகள்

ஆசிரியர் : நுண்கலைச் செல்வர், அ. இராகவன்

இந்நூல் தமிழகத்திற்கும் சாவகத்திற்குமுள்ள கலைத் தொடர்புகளை விளக்குவது. 'தமிழர் தம் சமயம், பண்பாடு, கலை ஆகியவற்றை அந்த நாட்டுப் பண்பாடு கலை ஆகியவற்றோடு ஒன்றுவித்துப் புதிய பண்பாட்டையும் கலையையும் உருவாக்கியவர்' என்பதை இந்நூல் நன்கு விளக்குகிறது ரூ. 6 00

## தமிழ்ப் புலவர் வரிசை - 31ஆம் புத்தகம்

ஆசிரியர் : கருப்பக்கிளர். சு. அ. இராமசாமிப் புலவர்

இப் புத்தகத்தில், முனைவர் மு. வரதராசனார் முதல் ந. சுப்பராய பிள்ளை ஈறாக 21 புலவர் பெருமக்களின் வரலாறுகள் கொடுக்கப்பட்டுள்ளன. வாழ்க்கை வரலாறுகள் எழுதும் ஆராய்ச்சியாளர்கட்கு இந்நூல் பெரிதும் பயன்படும். நூலகங்கள் தோறும் இருக்கவேண்டிய வரலாற்று நூல். ரூ. 5 00

## நாட்டுப்புறப் பாடல்கள் - திறனாய்வு

ஆசிரியர் : முனைவர் ஆறு அழகப்பன்

ஏட்டில் எழுதாக் கவிதைகளாக நாட்டுப்புற மக்களிடையே நடமாடிவரும் குழந்தைப் பாடல்கள், பக்திப் பாடல்கள், தொழிற்பாடல்கள், கொண்டாட்டப் பாடல்கள், நகைச்சுவைப் பாடல்கள், உணர்ச்சிப் பாடல்கள் ஆகியவற்றை அரிதின் முயன்று தொகுத்துள்ளார் இந் நூலாசிரியர். எல்லாரும் படித்து இன்புறும் வண்ணம் நூலகங்களில் இந் நூல் இடம் பெறவேண்டியது மிக மிக இன்றியமையாததாகும். ரூ. 11 00

## இளவழகனார் எழுதிய நூல்கள்

| | | |
|---|---|---|
| மறைமலையடிகளார் வரலாற்று மாட்சி | 10 | 00 |
| திருக்குறள் அறம் | 12 | 00 |
| பண்டைத் தமிழர் இன்பியல் வாழ்க்கை | 5 | 50 |
| பண்டைத் தமிழர் பொருளியல் வாழ்க்கை | (அச்) | |
| சங்கநூற் கட்டுரைகள் பகுதி க | 6 | 00 |
| ,, ,, உ | 3 | 00 |
| ,, ,, ௩ | 5 | 00 |
| நாலடியார் உரை | 10 | 00 |

அப்பர் அச்சகம், சென்னை - 1.